# திருச்சிற்றம்பல வெண்பா அந்தாதி





அருள்மிகு **தியாகராஜ சுவாமி**



அருள்மிகு **கமலாம்பாள்**

பதிப்பாசிரியர், புலவர் **வ.ஞானப்பிரகாசம்**

உ

திருச்சிற்றம்பலம்

# திருச்சிற்றம்பல வெண்பா அந்தாதி

இணைப்பு:

**திருவாரூர் பாதி திரு ஒற்றியூர்பாதி வெண்பா அந்தாதி**

**திருவாரூர் மருந்து வெண்பாமாலை**


**ஆசிரியர்:**

திரிசிரபுரம் வித்துவான்

**சி. தியாகராச செட்டியார்** அவர்கள்

**பதிப்பாசிரியர்**

*சிவத்தமிழ்ச்செல்வர்,*

**புலவர். வ. ஞானப்பிரகாசம்**



வெளியீடு

**அருள்வடிவேலன் பதிப்பகம்**

43, சிங்காரவேல்நகர்,

வண்டிப்பாளையம் அஞ்சல்,

கடலூர் - 607 004.

*திருச்சிற்றம்பலம்*

உடையாள் உன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால் அடியேனுன்
அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்புரியாய் பொன் னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து முடியும் வண்ணம் முன்னின்றே.

- மாணிக்கவாசகர்.

*திருச்சிற்றம்பலம்.*

---

## நூல் பற்றிய விபரம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | திருச்சிற்றம்பல வெண்பா அந்தாதி |
| தன்மை | : | பக்தி இலக்கியம் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பாசிரியர் | : | புலவர். வ. ஞானப்பிரகாசம் |
| நூற்பதிப்பு | : | முதற்பதிப்பு - 19 ஜூன் 2010<br>(ஆனித் திருமஞ்சன விழாவை முன்னிட்டு) |
| உரிமை | : | பதிப்பாசிரியருக்கு |
| தாள் | : | சிற்பூர் 11. |
| அச்சு | : | 11 புள்ளி |
| பக்கங்கள் | : | 112 |
| விலை | : | ரூ. 50.00 |
| வெளியீடு | : | அருள்வடிவேலன் பதிப்பகம்<br>43, சிங்காரவேல் நகர்,<br>வண்டிப்பாளையம் அஞ்சல்<br>கடலூர் - 607 004. |
| அச்சகம் | : | சுபம் பிரிண்டர்ஸ்,<br>76/1, சுப்பிரமணியம் தெரு,<br>சிதம்பரம் - 608 001<br>பேசி : 04144 - 232544, 230646. |

உ

திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

உ

## குருமரபு வாழ்த்து

*கயிலாய பரம்பரையிற் சிவஞான*
*போதநெறி காட்டும் வெண்ணெய்*
*பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்*
*மெய்ஞ்ஞான பானு வாகிக்*
*குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்*
*குருநமச்சி வாய தேவன்*
*சயிலாதி மரபுடையோன் திருமரபு*
*நீடூழி தழைக மாதோ.*

**- ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்**

திருவருள் தூண்டுதலின் வண்ணம், தில்லையைப் பற்றிய பழைய இலக்கியங்களை உரையோடு வெளியிடும் என் முயற்சியில், 15 ஆவது நூலாக, *திருச்சிற்றம்பல வெண்பா அந்தாதி* என்னும் இந்நூலை ஆனித் திருமஞ்சனத்தில் வெளியிடுகின்றேன்.

இந்நூல் திருவாவடுதுறை ஆதீன வித்துவான் திரு.சி.தியாகராச செட்டியார் அவர்களால் 1885 ல் செய்யப் பெற்றது. 1888 ல் டாக்டர் உ.வே. சாமிநாதைய்யர் அவர்களால் வெளியிடப்பெற்றது. தியாகராசர் அவர்கள் இந்நூலைச் செய்த போதே திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பா அந்தாதி, திருவாரூர் மருந்து வெண்பா மாலை என வேறு இருநூல்களையும் செய்துள்ளார்கள். திரு. உ.வே.சா அவர்கள் இம் மூன்று நூல்களையும் ஒரு சேர வெளியிட்டுள்ளார்கள். எனவே அடியேனும் இம்மூன்று நூல்களையும் சேர்த்தே வெளியிடுகின்றேன்.

திரு. உ.வே.சா. அவர்கள் தியாகராசர் அவர்களின் வரலாற்றை விரிவாக 50 தலைப்புகளில் எழுதியுள்ளார்கள். அது கலைமகள் திங்கள் இதழில் தொடர்ந்து வெளிவந்து. 1942 ல் திரு உ.வே.சா. அவர்களின் மகன் திரு. கல்யாண சுந்தரைய்யரால் நூலாகவும் பல பதிப்புகள் வெளிவந்துள்ளது. அவ் வரலாற்றைச் சுருக்கமாக எழுதியுள்ளேன். அவ் வரலாற்றின் நாற்பத்து நாலாவது தலைப்பாக மூன்று பிரபந்தங்கள் என இம்மூன்று நூல் எழுதப்பட்டமை, வெளியிடப்பட்டமையை திரு. உ.வே.சா அவர்கள் எழுதியுள்ளார்கள். நூல்கள் அறிமுகமாக அதை அவர் நடையிலேயே அப்படியே தந்துள்ளேன்.

## மூன்று பிரபந்தங்கள்

ஒருநாள் தியாகராச செட்டியாரிடமிருந்து தபால் மூலம் ஒரு கட்டு வந்தது: பிரித்துப் பார்த்தேன். திருச்சிற்றம்பல வெண்பாவந்தாதி என்ற பிரபந்தத்தின் கை யெழுத்துப் பிரதியாக இருந்தது. அதனோடு வந்த கடிதத்தில் செட்டியார், இந்தப் பிரபந்தம் ஓர் அன்பரால் இயற்றப்பெற்றது. அவர் உங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள விரும்புகிறார். பார்த்துத் திருத்தி அனுப்பவேண்டும் என்று எழுதியிருந்தார். அப்பிரதி, உறையூரில் செட்டியாருடன் இருந்து உதவி செய்து வந்த மு. நல்லசாமி பிள்ளை என்பவருடைய கையெழுத்தாக இருந்தது. படித்துப் பார்த்தேன். தியாகராச செட்டியார் வாக்கு என்று தெரிந்து விட்டது. தம்முடைய கண்ணோய் நீங்க வேண்டுமென்று பிரார்த்தித்து அப்பிரபந்தத்தைப் பாடியிருந்தார். நான் அதனை முற்றும் படித்து உடனே அதைப் பாராட்டி இரண்டு செய்யுட்களை இயற்றிச் செட்டியாருக்கு அனுப்பினேன்.

செட்டியார் பார்த்து மகிழ்ந்து எனக்கு அம்மகிழ்ச்சியைப் புலப்படுத்தி ஒரு கடிதம் எழுதினார். (25-11-85).

அக்கடிதத்தில் முதலில் என் பாடலைப் பாராட்டிப் பின் வரும் செய்யுளை எழுதியிருந்தார்.

நண்ணுமறி ஞன்சாமி நாதமறை யோனன்பிற்
பண்ணி யனுப்புதமிழ்ப் பாடல்கள் - அண்ணியவென்
அந்தாதிக் கம்பகமோ வார்ந்த மணிமுடியோ
சிந்தாதென் செப்புவேன் றோர்ந்து.

(அம்பகமோ-கண்ணோ)

தங்கள் பாடல்களைப் பிரபந்தத்தோடு பெற்றேன். யான் நோயோடு சம்பந்தப்பட்ட விருத்தனாதலின் தவறுவது இயற்கை. அதனால் தங்கட்கு அனுப்பி நன்றாய்ச் சோதிப்பிக்க நினைந்தேன். இன்னும் ஒரு பிரபந்தம் அஞ்சாறு தினத்தில் முன் பிரபந்தத்தோடு அனுப்புவேன். இரண்டையும் நன்றாய்க் கவனித்துப் பார்த்து அனுப்பல் வேண்டும்.

என்று கடிதத்தில் எழுதியிருந்தார். நான் மற்றொரு பிரபந்தத்தை எதிர்பார்த்திருந்தேன். சில தினங்களில் இவர் முன் அனுப்பியதையும் சேர்த்து மூன்று பிரபந்தங்கள் அனுப்பினார். திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பாவந்தாதி யென்பதும், திருவாரூர் மருந்து வெண்பாமாலை யென்பதும் புதியவை. அவ்விரண்டுக்கும் சிறப்புப் பாயிரச் செய்யுட்கள் எழுதியனுப்பினேன்.

*திருச்சிற்றம்பல வெண்பாவந்தாதி* என்னும் பிரபந்தம் சிதம்பரத்தில் எழுந்தருளிய ஸ்ரீ ஆனந்த நடராஜ மூர்த்தி விஷயமாகப் பாடிய நூறு வெண்பாக்கள் அடங்கியது. அந்தப்

பிரபந்தத்தில் விநாயகர், சமயாசாரியார், ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் ஆகியவர்களைத் துதிக்கும் மூன்று செய்யுட்கள் முதலில் உள்ளன.

துன்னுபெருஞ் செல்வத் துறைசை கயிலையென
மன்னி யமருமெழின் மாணிக்கம் - மின்னுபுகழ்ப்
பீடார் குருசுப் பிரமணிய தேசிகன்சீர்
பாடார் படித்தென் பயன்.

என்பது சுப்பிரமணிய தேசிகர் துதி.

**முதற் செய்யுள் வருமாறு:**

சீர்பூத்த வம்பலத்திற் றேவிமலர்க் கண்களிக்க
நார்பூத்த வின்ப நடநவிலும் - கார்பூத்த
கண்டன் மறைச்சிலம்பு காட்டு மலர்ப்பாதம்
உண்டுதுணை நாயே னுயிர்க்கு.

(நார் - அன்பு. இன்ப நடம் நவிலும் - ஆனந்த தாண்டவம் புரியும். கார் - கருமை.)

அப்பிரபந்தத்தில் தம்முடைய கண்ணோயைப் போக்கி யருளவேண்டுமென்னும் குறிப்பை அமைத்துப் பாடிய செய்யுட்கள் வருமாறு:

மணிகண்டா வம்பல வாணா வருத்தும்
பிணிகண்டு நெஞ்சிரக்கம் பேணாய் - பணிகண்ட
பூணாய்பொன் மன்றாடும் புண்ணியா நீசற்றும்
காணாய்நா யேன்மறைந்த கண். 10

கண்ணொளிமாய்த் தன்பர் கவிபுகலக் கேட்டடியேன்
கண்ணொளி மாய்க்கக் கருதினாய் - பண்ணொளிரப்

பாடவறி யேனம் பலவரதா நின்னடனம்
நாட வருள்கண் ணலம். 11

(மாய்த்து - மறைத்து. சுந்தரமூர்த்தி நாயனாருக்குக் கண்ணொளியைப் போக்கி அவராற் பாடப்பெற்றமையை முதலடியிற் குறித்தார்.)

*திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பா அந்தாதி* யென்பது முன் வெண்பாவால் திருவாரூரையும் பின் வெண்பாவால் திருவொற்றியூரையும் மாறி மாறித் துதிக்கும் நூறு செய்யுட்களை உடையது. நக்கீரர் கைலை காளாத்தி என்னும் இரண்டையும் பாராட்டி இயற்றிய கைலைபாதி காளத்திபாதி யந்தாதியைப் பின்பற்றி இதனை இவர் பாடினார். திருவாரூரிலும் திருவொற்றியூரிலும் தியாகேசர் சந்நிதிகள் உண்டு. தியாகப் பெருமானுக்கு வழி வழி யடிமை செய்யும் குலத்தில் உதித்தவராதலின் செட்டியார் இவ்விரண்டு தலங்களையும் ஒருங்கே துதித்தார். இதன்கண் பல பாடல்களில் தம் கண்ணோயைப் போக்க வேண்டுமென்று இறைவனை வேண்டுகின்றார். சில வருமாறு.

திருவார் கமலைத் தியாகேசா வொப்பில்
ஒருவாவென் கண்ணோ யொழிப்பாய் - கருவாய்
பிணிக்குமருந் தென்றுன்னைப் பேசலனறி யென்கண்
மணிக்குமருந் தென்பேன் மகிழ்ந்து.

(கமலை - திருவாரூர். கருவாய் பிணிக்கு -கருப்பத்தில் வாய்க்கும் பிறவிப் பிணிக்கு) 1

மகிழ்ந்தொற்றி யூர்வாழும் வள்ளான்முக் கண்ணா
நெகிழ்ந்துள்ள நின்னை நினைப்பேன் - புகழ்ந்துகவி

பாடுவனென் கண்மறைவைப் பாற்றினனென்
றென்றுங்கொண்
டாடுவனென் னையா வருள்.

(பாற்றினன் - நீக்கியருளினான். என்று என்றைக்கும் கொண்டாடுவேன்.) 2

அருளுடையே னென்றென் றறைவையறி வில்லா
மருளுடையேன் கண்ணை மறைத்தல் - அருளோ
திருவாரூர் வாழுஞ் சிவனேவான் வாழ
மருவாரூர் மாய்த்தாய் வழுத்து.

(மருள் - மயக்கம். மருவாரூர் - பகைவர் ஊராகிய திரிபுரங்களை) 3

பாடக்கண் பாவலர்க்குப் பணடுதந்தா யின்றுன்னை
நாடக்கண் ணாயேற்கு நன்குதவின் - நீடுன்
புகழ்புதிதா மாரூர்ப் புனிதாவஃ தன்றி
இகழ்பவரோ யாரு மிலர்.

(பாவலர் என்றது சுந்தரமூர்த்தி நாயனாரை. முன்பு அவருக்குக் கண்ணொளி தந்தாயென்ற பழஞ்சரிதம் எனக்கு இப்போது கண்ணொளி யருளினால் புதுமை பெறுமென்றார்.

நம்பினே னுன்னை நழுவவிடேல் வெந்நோயால்
வெம்பினேன் வீதி விடங்கனே - தும்பிக்
கரத்தானோ யானுமொரு கான்முளைமண் ணுண்ட
சரத்தோ யருள்கமலே சா.

(வீதிவிடங்கனென்பது தியாகேசர் திருநாமங்களுள் ஒன்று. தும்பிக் கரத்தான் - விநாயகர். கான்முளை - மகன்.

உனக்கு விநாயகர் மாத்திரம் பிள்ளையோ? நானும் மகனல்லனோ? மண் உண்ட சரத்தோய் - உலகத்தை உண்ட திருமாலாகிய அம்பை உடையோய்.) 71

மூன்றாவது பிரபந்தமாகிய **திருவாரூர் மருந்து வெண்பா மாலை** யென்பது ஸ்ரீ தியாகேசரை மருந்து மருந்தென்று சொல்லிப் பாராட்டும் நூறு பாடல்களை யுடையது.

திங்களணி வேணித் தியாகேச னென்னும்பேர்
தங்கப் புனைந்த தனிமருந்து - துங்கத்
திருவந் தருமருந்து செய்யமறைச் சென்னி
மருவுமருந் தாரூர் மருந்து.

என்பது அதன் முதற்செய்யுள்.

தம் கண்ணோயை மாற்றவேண்டுமென்னும் குறிப்பை உள்ளடக்கிச் செட்டியார் அமைத்த பாடல்கள் சில வருமாறு:

கொன்றை யணிந்த குணமருந் தன் பர்க்கென்றும்
நன்று மகிழ்ந்துபுரி நன்மருந்து - குன்றாத
காட்சியடி யேற்கருளுங் கண்மருந்து கல்வியான்
மாட்சிபெறு மாரூர் மருந்து. 2

தேவி மகிழத் திருநடனஞ் செய்மருந்து
பாவியேன் கண்ணோயைப் பாற்றுமருந் - தோவில்
அருளே திருமேனி யாக்கொண் மருந்து
மருளேயா வாரூர் மருந்து.

(பாற்றும் - போக்கும். மருள் ஏயா - மயக்கம் பொருந்தாத.) 40

திருமருந்து வேதச் சிரமருந்தா னந்தம்
தருமருந்தென் கண்ணோய் தவிர்க்கும் - அருமருந்து
தேமருந்து நேருந் தியாகேச னென்னும்பேர்
மாமருந் தாரூர் மருந்து.

(தேமருந்து நேரும் - தெய்வத் தன்மையுடைய அமுதத்தை யொத்த.) 100

இப்பிரபந்தத்தில் நாயன்மார்களுடைய சிறப்பையும் மதுரையில் சோமசுந்தரக் கடவுள் இயற்றிய திருவிளை யாடல்களையும் பலபடியாகப் பாராட்டியிருக்கிறார்.

இந்த மூன்று பிரபந்தங்களும் 1888 - ஆம் வருஷம் என்னால் சென்னை, தொண்டைமண்டலம் அச்சியந்திர சாலையிற் பதிப்பிக்கப்பட்டன.

---

தியாகராசர் அவர்கள் 1888 ஜனவரி 19-ல் சிவபதம் எய்தியுள்ளார்கள். இம் மூன்று நூல்களும் அநேகமாக அவர் சிவபதம் அடைந்த பிறகே வெளிவந்திருக்கலாம். தம் நூல்களை அச்சு வடிவில் பார்க்கும் பேறு அவர்களுக்கு இல்லாமல் போய்விட்டது.

தியாகராசர் அவர்களின் திருவுருவப்படம் அமையவில்லை எனத் திரு. உ.வே.சா எழுதியுள்ளார். தியாகராசர் வரலாற்றின் முன்னைய பதிப்பில் (மூன்றாம் பதிப்பு 1951 ஜுலை.) அவர் படம் இடம்பெற வில்லை. ஆனால் சென்னை 90, பெசன்ட் நகர், டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடு ஆகிய, "பிற்காலப் புலவர்கள்" நூலில் தியாகராசர் அவர்களின் திருவுருவப் படம் ஒருவாறு அமைந்துள்ளது. அதனை அப்படியே இந்நூலில் அவர் வரலாற்றின் முகப்பில் இடம்பெறச் செய்துள்ளேன். இப்பதிப்பின்

மூன்று நூல்களையும் தியாகராசர் அவர்கள் எழுதிய தமிழ் நடையிலே தரமால் படிப்போரின் எளிமை கருதி சொற்களைச் சந்தி பிரித்து அரிய சொற்களுக்குக் கீழே பொருள் தந்துள்ளேன். பக்க விரிவஞ்சி முழுஉடரை தரவில்லை.

தியாகராசரின் தாத்தா சபாபதி. தந்தை சிதம்பரம். அந்த மரபில் வந்த தியாகராசரும் தில்லை நடராசர் மீது மிகுந்த பக்தியுடையவராய் விளங்கினார் என்பதை அவர் வரலாறு தெளிவாகச் சொல்கிறது. தாம் எழுதும் மடலின் தொடக்கத்தில், **ஆனந்த நடராசர் திருவருளால் எல்லா நன்மைகளும் மேன்மேலும் பெருக உண்டாகுக** என எழுதுவது அவர் வழக்கம் என அறிகிறோம். தியாகராசர் நல்உள்ளம் நமக்கும் தில்லை நடராசப் பெருமான் திருவருளைப் பெற்றுத் தரும்.

திருவாவடுதுறை ஆதீனம் அருள்மிகு ஞானமா நடராசப் பெருமான் திருநீராட்டு விழாக்களில் அடியேனைப் பேசப் பணித்தருளியும், அடியேன் சைவ நூல்களைத் திருச் சந்நிதியிலே வெளியிட்டு அருளியும் தாயினும் சாலப் பரிந்து இன்னருள் பொழியும் **சீர்வளர்சீர் குருமகா சந்நிதானம் அவர்களின்** பொன்னார் திருவடிகளை நாளும் போற்றி வணங்கி மகிழ்கின்றேன்.

எளியேனின் நூல் வெளியீட்டுப் பணிக்குத் தமிழகம் முழுமையும் சில அன்பர்கள் தொடர்ந்து உதவி வருகின்றனர். அனைவரையும் நன்றியோடு வணங்கி மகிழ்கின்றேன்.

**இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க**

43, சிங்காரவேல் நகர்,
கடலூர் 607 004.
செல் : 94421 28214.

அன்பன்
**வ.ஞானப்பிரகாசம்**
15.06.2010

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்





திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
23-ஆவது குருமகாசந்நிதானம்
**சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக**
**பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**
திருவாவடுதுறை - 609 803, நாகை மாவட்டம்
தொலைபேசி எண். 04364 - 232021

நாள் : 14.06.2010

# "அருள் வாழ்த்துரை"

நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க

பேருங் குணமும் பிணிப்புறுமிப் பிறவிதனைத்
தூரும் பரிசு துரிசறுத்துத் தொண்டரெல்லாம்
சேரும் வகையால் சிவன் கருணைத் தேன்பருகி
ஆருங் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே.

- திருவாசகம்.

தில்லைத் திருத்தலம் தொடர்பான பக்தி இலக்கியங்களைத் தொடர்ந்து பதிப்பித்து வரும் சிவத்தமிழ்ச் செல்வர், புலவர் வ.ஞானப்பிரகாசம் அவர்கள் வருகின்ற

ஆனித் திருமஞ்சன விழாவை முன்னிட்டுத் திரிசிரபுரம் வித்துவான் சி. தியாகராச செட்டியார் அவர்கள் இயற்றிய மூன்று இலக்கியங்களைப் பதிப்பித்துள்ளமை அறிந்து மகிழ்ச்சி அடைகின்றோம்.

திருச்சிற்றம்பல வெண்பா அந்தாதி, திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பா அந்தாதி, திருவாரூர் மருந்து வெண்பாமாலை ஆகிய மூன்று இலக்கியங்களுமே, சிவபக்தி, அடியார்பக்தி மேலோங்கச் செய்யும் வகையில் சீர்மை பொருந்த இயற்றப் பெற்றுள்ளன. சொல் வளமும் பொருள்வளமும் இணைந்து விளங்கும் இவை போன்ற இலக்கியங்கள் இக்காலத்துக் கவிஞர்களுக்குச் சிறந்த வழிகாட்டுதல் ஆகும்.

அன்பர்கள் இந்தச் சிறந்த சைவத் தமிழ் இலக்கியத்தினைக் கற்றுப் பயன்கொண்டு தில்லைக் கூத்தன் திருவடி பக்தியும் வளரப்பெற்று உய்வார்களாக. புலவர் வ. ஞானப்பிரகாசம் அவர்களின் சிவத்தொண்டுகள் மேன்மேலும் தழைத்துச் சிறந்திட வேண்டுமென நமது வழிபடு கடவுளாகிய அருள்மிகு ஞானப்பெருங்கூத்தன் திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

உ

திருச்சிற்றம்பலம்

# வித்துவான் தியாகராச செட்டியார் வாழ்க்கைச் சுருக்கம்



## ஊரும் குலமும்:

திருச்சிராப்பள்ளியில் லாலுகுடி வட்டத்தில் அமைந்த ஊர் பூவாளூர். திருவானைக்காவுக்கும் திருத்தவத்துறை (லாலுகுடி)க்கும் அருகில் இவ்வூர் உள்ளது. சிறந்த சிவத்தலம். மன்மதன் இத்தலத்து இறைவனைப் பூசித்ததால் பூவாளியூர்

எனப் பெயர் பெற்று, நாளடைவில் பூவாளூர் என ஆயிற்று என்பர். திருவாவடுதுறை ஆதீன வித்துவான் தவத்திரு கச்சியப்ப முனிவர் தலபுராணம் பாடியுள்ளார். இறைவர் திருமூலநாதர். இறைவி குங்கும செளந்தரி. தலமரம் வில்வம். பங்குனி நதி தீர்த்தம்.

பூவாளூரில் வாழ்ந்த குடிகளுள் பூவாளூர்ச் செட்டிமார்கள் என்பார் ஒருவகையினர். காவிரிப் பூம்பட்டினத்தைக் கடல் கொண்ட காலத்தில் அங்கிருந்து இங்கு வந்து குடியேறியவர்கள் என்பர். அவர்களுள் கல்விக்குடையார் கோத்திரத்தினர் ஒரு பிரிவினர். அவருள் ஒருவர் தஞ்சாவூர் மகாராட்டிர அரசரிடம் கருவூலராக இருந்தவர்; செல்வச் செழிப்பால் முதன்முதலாக அவ்வூரில் மாடிவீடு கட்டி வாழ்ந்தார். அம்மாடிவீட்டார் பரம்பரையில் தோன்றியவர் சபாபதி செட்டியார். சிறந்த சிவபக்தர் - கொடைப் பண்பினர்.

பூவாளூர்ச் சிவன் கோவிலில் நடராசர் எழுந்தருளிய சபையைப் புதுப்பித்துக் கட்டியதோடு அதற்கு முன்பு ஒரு மண்டபத்தையும் கட்டுவித்தவர். அம்மண்டபத்தின் முன்னே உள்ள தூண்களில் ஒன்றில் அவர் உருவமும், மற்றொன்றில் அவர் மனைவியார் உருவமும் அமைக்கப் பெற்றுள்ளன.

## பிறப்பும் இளமையும்:

சபாபதி செட்டியாரின் முதல் மகன் சிதம்பரம் செட்டியார். அவருடைய முதல் மகனே தியாகராச செட்டியார். 1826 - ல் (வியய ஆண்டு) தோன்றியவர்.

திருவாரூரில் அபிஷிக்த வகுப்பினருள் ஒரு பரம்பரையினர் சபாபதி செட்டியார் குடும்பத்தினர்க்கு தீட்சா

குருவாக விளங்கினர். தியாகராச செட்டியார் காலத்தில் ஞானாசிரியராக இருந்தவர் சாம்பமூர்த்தி ஐயா. தம் ஞானாசிரியரைக் கண்டு வழிபடும்போதெல்லாம் திருவாரூர்த் தியாகராசப் பெருமானையும் வழிபடும் பக்தியாலேயே. இவருக்குத் தியாகராசர் என்னும் பெயர் வைக்கப்பெற்றது.

இளமையில் திண்ணைப் பள்ளியில் இவர் கல்வி பயின்றார். தந்தையின் விவசாயப் பணிக்கு உதவியாக இருந்தார். ஓய்வு கிடைக்கும் போதெல்லாம் தமிழ்ச்செய்யுள் நூல்களை விரும்பிக்கற்றார். அருகில் உள்ள ஊர்களில் இருந்த புலவர்களோடு பழகி தமிழ்நூல்களைப் பாடங்கேட்டார்.

**மகாவித்துவானின் மாணவர்:**

அப்போது திருச்சிராப்பள்ளியில் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் சிறந்த தமிழ்ப்புலவராக விளங்கினார்கள். சில செல்வர்கள் அழைப்புக்கிணங்கி அவர்கள் பூவாளுருக்கு வருகைதந்து சில நாட்கள் தங்கியிருந்தார்கள்.

பூவாளூர் இறைவர் மீது பூவாளூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி, பாடி அரங்கேற்றம் செய்தார்கள். பிள்ளையவர்கள் பாடம் சொல்வதையும் பல மாணவர்கள் பாடம் கேட்பதையும் கண்டு, இளைஞர் தியாகராசருக்கு அவர்கள் மீது பக்தி உண்டாயிற்று. தாமும் மாணவராகச் சேர்ந்து பாடம் கேட்க விரும்பினார். முதலில் தம் தந்தை மறுத்தாலும், பலமுறையும் வேண்டி அனுமதி பெற்று 1844 ல் (குரோதி ஆண்டு) பிள்ளையவர்களிடம் மாணாக்கராகச் சேர்ந்தார்.

**முதலில் திருச்சிற்றம்பலக் கோவையாரைப் பாடம் கேட்டார்.** இவரது அறிவுத்திறன் கண்டு பிள்ளையவர்கள் இவரிடம் தனியன்பு செலுத்தினார்கள். இவரது கையெழுத்து நன்றாக அமைந்ததால் அன்பர்களுக்குக் கடிதங்கள் எழுதுவதற்கும், தாம் செய்த பாடல்களையும், நூல்களையும் படி எடுப்பதற்கும் இவரைப் பயன்படுத்திக் கொண்டார்கள்.

தியாகராசரின் சிறிய தகப்பனார் திருச்சியில் சின்னக்கடைத் தெருவில் பெரிய மாளிகையில் வசித்து வந்தார். அவர் பிள்ளை அவர்களை வரவேற்று அன்போடு உபசரித்து வந்ததால், பிள்ளையவர்கள் அந்த இல்லத்தில் பல நேரம் தங்கி மாணவர்களுக்குப் பாடம் சொல்லலானார். தியாகராசர் தம் ஆசிரியருக்கு அன்போடு பணிவிடைகள் செய்து வந்தார். செய்யுள் இயற்றும் ஆற்றல் பெருகிற்று. குரு பக்தியில் சிறந்தவராய்த் **தம் ஆசிரியரைத் துதித்து நாளும் ஒரு செய்யுள் பாடி வரலானார்.** அப்படி அவர் பாடிய பாடல்கள் 95 கிடைத்துள்ளன. (ஸ்ரீ மீனாட்சி சுந்தரம்பிள்ளை அந்தாதி)

தம் ஆசிரியர் செய்யுளைச் சொல்லும் இசையிலேயே தாமும் இசையோடு சொல்லிப் பழகினார். அவரைப் போலவே பேசவும் பழகினார். திருவிளையாடற் புராணத்தையும், கம்பராமாயணத்தில் சில பகுதிகளையும், வேறு சில இலக்கியங்களையும் பாடம் கேட்டார். விசாகப் பெருமாளையர் எழுதிய பால போத இலக்கணத்தைப் பாடம் கேட்டு இலக்கண அறிவையும் பெருக்கிக் கொண்டார். பின்பு நன்னூல் காண்டிகையுரை, விருத்தியுரை பாடம் கேட்டார். பின்பு இலக்கணக் கொத்து, இலக்கண விளக்கம், இலக்கண விளக்கச் சூறாவளி, யாப்பருங்கலக் காரிகை, தண்டியலங்காரம் முதலிய இலக்கண நூல்களையும் பாடம் கேட்டார்.

கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாசரின் பிரபுலிங்க லீலையைப் பாடம் கேட்டதால் சிவப்பிரகாசர் மீது ஈடுபாடு அதிகமாயிற்று. அவரது சோணசைல மாலையைப் பாடம் கேட்டு, அந்நூலில் அமைந்த எழுசீர் விருத்தம்போல் தாமும் பாட ஆசைப்பட்டு, **திருச்செந்தூர் முருகக் கடவுள் மீது ஒரு மாலை 30 பாடல்கள் பாடினார். திருச்சிக்கு அருகினுள்ள தலங்களைப் பற்றிப் பதிகங்களும், இரட்டை மணிமாலைகளும் செய்தார்.** ஆசிரியர் தந்த ஈற்றடிகளைக் கொண்டு பல தனிப்பாடல்கள் செய்தார்.

பிள்ளையவர்களின் மாணவர்கள் சிலருக்குத் தியாகராசர் சிறு நூல்களை முதலில் பாடம் சொல்லலானார். தாம் கற்றவற்றைப் பிறருக்குக் கற்பித்தலால் அறிவைப் பெருக்கிக் கொண்டார். கேட்போர் மனம் கொள்ளக் கற்பித்தலில் வல்லவர்.

## இல்லறம் ஏற்றல்:

திரிசிரபுரத்தில் படித்து வந்த காலத்தில் இவருக்குத் திருமணமாயிற்று. அந்நகரில் இருந்த விருத்தாசல செட்டியாரின் மகள் செல்லம்மா இவரின் வாழ்க்கைத் துணைவி யானார்.

## ஆசிரியர் பணி:

அங்குப் பட்டாளத்தாருக்காக நடந்து வந்த பள்ளிக் கூடத்தில், இவர் பிள்ளையவர்களின் பரிந்துரையின்படி ஆசிரியராக அமர்த்தப் பெற்றார். ஊதியம் ரூ.10. வன்மையான மனமுடைய பட்டாளத்தார் உள்ளத்தில் தமிழன்பையும் தெய்வபக்தியையும் விதைத்தார்.

பட்டாளத்தார் பழக்கத்தால், இவர் மனதைரியமும், அஞ்சாமை இயல்பும் பெற்றார்.

இவரது திறமையை அறிந்த கல்வித் துறையினர் ஸ்ரீரங்கம் அரசுப் பள்ளியில் இரண்டாம் ஆசிரியராக இவரை 1857, செப்டம்பர் 12 ல் பணியமர்த்தினர். முதலில் ஊதியம் 10 ரூபாய். இரண்டிரண்டு ரூபாயாகச் சம்பள உயர்வு பெறும் அக்காலத்தில் எடுத்தவுடன் ஐந்து ரூபாய் உயர்வு இவருக்குத் தரப்பெற்றது. பாடத் திட்டத்தில் அமைந்த பாடங்களை விரைவில் நடத்தி முடித்துவிட்டு, மாணவர்களின் தமிழுணர்வு பெருகும் வகையில் வேறு பல இலக்கண இலக்கியங்களையும் இவர் கற்பித்து வந்தார். மாணவர்கள் கிடைத்த நேரங்களில் வீட்டிற்கும் வந்து பாடம் கேட்டுத் தம் அறிவைப் பெருக்கிக் கொண்டனர்.

தியாகராசர் ஸ்ரீரங்கத்தில் இருந்த காலத்தில் அடிக்கடி திருச்சி வந்து தம் ஆசிரியரைக் கண்டு தமக்கு ஏற்படும் ஐயங்களைப் போக்கிக் கொள்வார். **தியாகராசர் நாளும் திருவாசகத்தைப் பாராயணம் செய்வார். திருவாசகம் முழுவதுமே இவருக்கு மனப்பாடம் உண்டு.**

விடியலில் நீராட கொள்ளிடம் ஆற்றுக்குச் செல்லும் போது பள்ளி மாணவர்களும் புடைசூழச் செல்வர். இவர் பாடம் சொல்லியபடியே செல்வார்.

## ஆறுமுக நாவலர் சந்திப்பு:

ஒரு சமயம் யாழ்ப்பாணத்து நல்லூர் தவத்திரு ஆறு முக நாவலர் அவர்கள் திருச்சி வந்தபோது, தியாகராசர் சந்தித்து உரையாடி மகிழ்ந்ததோடு, தல வழிபாடு செய்யத் துணை நின்றார்.

சாக்கோட்டை என்று பெயருடைய **அளகாபுரி உமையம்மை பிள்ளைத்தமிழ்** ஒன்றை. கண்டனூர் அருணாசல செட்டியார் குமாரர் முத்துக் கறுப்பச் செட்டியார் வேண்டுகோளின்படியும், ஆறுமுக நாவலர் பணித்தபடியும் **தியாகராசர் பாடினார்.** இது பிரமாதி ஆண்டு தை மாதம் வெளியிடப்பெற்றது.

இரத்தினகிரி எனும் வாட்போக்கிக் கலம்பகம் ஒன்றைப் பிள்ளையவர்கள் செய்திருந்தார். அதை அவர் சென்று அரங்கேற்ற நேரமில்லாமையால், அவர் பணித்தபடி தியாகராசர் அங்கு சென்று பலரும் மகிழ அந்நூலை அரங்கேற்றம் செய்து பாராட்டு பெற்று வந்தார்.

## பொன்னுசாமித்தேவர் சந்திப்பு:

மதுரையில் தமிழ்ச் சங்கம் நிறுவிய திருமிகு பாண்டித்துரைத் தேவரின் தந்தையார் திரு பொன்னுசாமித் தேவர். அவர் இராமநாதபுரம் சமஸ்தான அதிபராக இருந்தபோது எல்லோரும் நலம் பெற்று வாழ்ந்தனர். அவர் புலவர்களை மிகவும் போற்றுபவர். நல்ல புலமை மிக்கவர். அவர் ஒரு சமயம் சென்னை சென்றபோது வழியில் திருச்சியில் தங்கினார். தியாகராசரைப் பார்த்து மகிழ விரும்பினார். செய்தியறிந்து தியாகராசர் சென்று பார்த்து இருவரும் உரையாடி மகிழ்ந்தனர்.

## கும்பகோணத்தில் பணி:

கும்பகோணம் கல்லூரியில் கோபாலராவ் என்பவர் தலைமையாசிரியராக இருந்தார். அவர் தமிழ்ப் பாடம் நடத்துகையில், "செல்வுழிச் செல்க" என்பதன் இலக்கணத்தை

வினவியபோது தேவாஜிராவ் என்ற ஒரு மாணவர் செல் + உழி + செல்க எனப் பிரித்துச் சொல்லியதோடு இடையில் வந்த வ் என்பது எழுத்துப் பேறு என்பதைச் சொல்லி, வேறு சில எடுத்துக் காட்டுகளையும், உடம்படு மெய்யுக்கும் எழுத்துப் பேற்றிற்கும் உள்ள வேறுபாட்டையும் விளக்கமாகச் சொன்னார். அம்மாணவர் ஸ்ரீ ரங்கத்தில் தியாகராசரிடம் படித்ததனால் பெற்ற தமிழறிவே இது என்பதை அறிந்த கோபாலராவ், தியாகராசரை அழைத்து வரச் செய்து அங்குப் பணியில் அமர்த்தினார். அந்நாள் 1865 ஜுலை 3 ஆகும்.

கும்பகோணம் சக்கரபாணிப் பெருமாள் கோயிலின் தெற்கு வீதியில் தென்சிறகில் ஒரு வீட்டில் குடியேறினார். நாளும் தவறாமல் சிவபூசை செய்பவர். வீட்டுத் தோட்டத்திலேயே பூஞ் செடிகளைப் பயிர் செய்தார். உடன் தேவைக்குப் பூக்கள் உள்ள இடங்களுக்குச் சென்று எடுத்து வருவார். அது கண்ட அரங்கசாமி ஐயங்கார் தம் வீட்டுத் தோட்டத்தில் பூக்களை எடுத்துச் செல்லுமாறு அன்போடு உதவினார். தியாகராசர் கும்பகோணம் வந்ததிலிருந்து அவருக்குப் பேரும் புகழும் பெருகின. பல செல்வர்கள் நண்பர்களாயினர்.

## திருவாவடுதுறை ஆதீனத் தொடர்பு:

தியாகராசர் வாரந்தோறும் மயிலாடுதுறை சென்று தம் ஆசிரியரைப் பார்த்து உரையாடி மகிழ்வார். ஒரு சமயம் பிள்ளை அவர்கள் தியாகராசரைத் திருவாவடுதுறை ஆதீனத்திற்கு அழைத்துச் சென்றார். அப்போது ஆதீனத் தலைவராக இருந்தவர்கள் **சீர்வளர்சீர் அம்பலவாண தேசிகர்** ஆவார்கள். சின்னப் பட்டத்திலிருந்தவர்கள் **மேலகரம் சுப்பிரமணிய**

தேசிகர் ஆவார்கள். இருவரையும் வழிபடும் பேறு கிடைத்தது. பின்பு வாய்ப்பு நேரும்போதெல்லாம் தியாகராசர் ஆதீனம் சென்று மகிழ்வாராயினார்.

பிள்ளையவர்கள் கும்பகோணத்தில் திருவாவடுதுறை ஆதீனக் கிளை மடத்தில் தங்கி, கும்பகோண புராணத்தை இயற்றியபோது, தியாகராசர் உடனிருந்து உதவியும் ஐயம் தெளிந்தும் மகிழ்ந்தார். ஒருமுறை தம் ஆசிரியரைத் தம் நிறுவனத்திற்கு அழைத்துச் சென்று, தம் மாணவர்களையும் வணங்குமாறு செய்து மகிழ்ந்தார்.

பிள்ளையவர்களின் நூல் அரங்கேற்றங்களில் சில விஷமிகள் வேண்டுமென்றே தடையெழுப்பியபோது, தியாகராசர் தக்கவாறு விடை சொல்லி அவர்களை வாயடங்க வைத்தார்.

## எவரையும் பாராட்டும் பண்பு:

கும்பகோணம் கடை வீதியில் ஒரு திண்ணையில் ஒரு வயோதிக அந்தணர் இரவு நேரத்தில் வடமொழியில் திருவிளையாடல் புராணத்தை (ஹாலாஸ்ய மஹாத்மியம்) பிரசங்கம் செய்து வந்தார். தியாகராசர் அவ்வழிச் செல்லும்போது நின்று கேட்டு மகிழ்வார். பழியஞ்சிய படலத்தில் - திருநகரின் புறம்பு - என்பதற்குரிய நயமாக, கருணையே வடிவான மீனாட்சி சொக்கர் அருளாட்சி செய்யும் மதுரையில் - தருமதேவதை குதூகலிக்கும் பாண்டியன் ஆட்சி செய்யும் மதுரையில் எல்லைக்குள் அகால மரணம் நிகழ வாய்ப்பில்லை - எனச் சொன்ன நயத்தைக் கேட்டுத் தியாகராசர், ஆ! ஆ! என்ன அருமை! என்ன ரசம் எனப் பாராட்டி மகிழ்ந்தார்.

**மாணவர்களின் மரியாதை:**

தமக்கென்று குழந்தை இல்லாத தியாகராசர் தம் மாணவர்களைத் தம் குழந்தைகளாகவே நினைப்பவர். ஒரு குடும்பத்தில் தந்தையும் பிள்ளைகளும்போல் தியாகராசர் மாணவர்களோடு பழகுவார். குணம் கண்டு பாராட்டி மகிழ்வார். குற்றம் கண்டு கண்டிக்கத் தயங்கமாட்டார். பி.ஏ. வகுப்பில் கம்பராமாயணம் - சடாயு உயிர் நீத்த படலத்தில் "வஞ்சனையால் வந்த வரவு" என்ற பாடலில் வரவு என்ற சொல்லுக்கு உரிய பொருளை யோசித்தபோது, சுப்பையா என்ற மாணவர் (பிற்காலத்தில் புதுக்கோட்டை உயர்நீதிமன்ற நீதிபதியாக இருந்தவர்) வரவு என்பதற்குத் துன்பம் எனப் பொருள் சொன்னபோது, தியாகராசர் மகிழ்ந்து, அவரைப் பாராட்டியதோடு, அதனைத் தம் நூலினும் குறித்து வைத்தார்.

பிற்காலத்தில் தஞ்சையில் வழக்கறிஞராக இருந்த கே. எஸ். ஸ்ரீநிவாச பிள்ளை என்பவர் தியாகராசரிடம் கும்பகோணம் கல்லூரியில் படித்ததோடு, வீட்டிலும் பல நூல்கள் பாடம் கேட்டவர். தாம் எழுதிய "தமிழ் வரலாறு" என்னும் நூலைத் தம் குரு பக்தியின் அடையாளமாகத் தம் ஆசிரியருக்கு அர்ப்பணம் (காணிக்கை) செய்து மகிழ்ந்தார். தியாகராசர் சிவபக்தியும் சைவ சமயத்தில் அழுத்தமான அன்பும் உடையவர். நடராசப் பெருமானிடத்தில் இடையறாத பக்தியுடையவர். சிவ நிந்தை செய்வாரைக் கண்டால் கண்டித்துப் பேசுவார். நூல்களில் சிவநிந்தை வந்தால் காதைப் பொத்திக் கொள்வார். அடிக்கடி சிவ நாமங்களைச் சொல்வார்.

**திருவாவடுதுறை ஆதீனச் சீடர்:**

திருவாவடுதுறை ஆதீனத்தில் 15 ஆம் பட்டத்தில் ஞானாசிரியராக இருந்த சீர்வளர்சீர் அம்பலவாண தேசிகரிடத்தில் தீட்சை முதலியன பெற்றுக் கொண்டவர். ஆதலால் அடிக்கடி "அம்பலவாணா" என்று சொல்லுவார். 16 ஆம் பட்டத்தில் ஞானாசிரியராக இருந்த சுப்பிரமணிய தேசிகருடைய பெருமையை நன்கு உணர்ந்தவர். கும்பகோணத்தில் முதன் முதலாகச் சம்பளம் உயர்ந்தபோது முதற் சம்பளத்தில் அதிகமாகக் கிடைத்த தொகையைக் கொண்டு திருவாவடுதுறை ஆதீன மடாலயத்திலுள்ள திருமாளிகைத் தேவருக்குத் திருமஞ்சனம் செய்வித்தார். ஆதீனத் தலைவருக்கும் மடத்தைச் சார்ந்தவர்களுக்கும் இவரிடம் நல்ல மதிப்பு இருந்தது. இவரை யாவரும் செட்டியார் என்றே வழங்குவார்கள்.

தமிழ்த் தொடர்பான எதுவாயினும் செட்டியாருக்குத் தெரிவிக்க வேண்டுமென்று சுப்பிரமணிய தேசிகர் கூறுவார். ஆதீனம் தொடர்பாக யாரேனும் செய்யுள் இயற்றி அரங்கேற்றினால் அப்போது செட்டியாரை வருவிப்பார்கள். புத்தகங்கள் வெளியாகும்போது செட்டியாரது சிறப்புப் பாயிரம் பெறுவார்கள்.

திருவாவடுதுறை ஆதீனத்தில் இளமையிலேயே துறவு பூண்ட தம்பிரான்களில் இராமலிங்கத் தம்பிரான் ஒருவர். பிள்ளையவர்களிடம் பாடம் கேட்டவர். நல்ல புலமையும் செய்யுள் இயற்றும் திறமும் பெற்றவர். அவர் தம் மொத்தவர்கள் தூங்கும்போது தம் நீண்ட நகங்களால் அழுத்தமாகக் கிள்ளி விடுவார். அதனால் அவரைப் புலிக்

குட்டித் தம்பிரான் என்று அழைக்கும் வழக்கம் ஏற்பட்டது. அவர் அப்போது சின்னப் பட்டத்தில் இருந்த நமசிவாய தேசிகருக்கு ஏதோ அபசாரம் செய்து விட்டார். அஃதறிந்த ஆதீனத் தலைவர், புலிக்குட்டியை மடத்திலிருந்து விரட்டி விட்டார். அவர் தியாகராசரிடம் சென்று முறையிட்டுக் கொண்டதனால், தியாகராசர் அவரை உடன் அழைத்துக் கொண்டு, தேசிகர் மீது தாம் இரண்டு பாடல்கள் செய்து கொண்டு, தம்பிரானையும் செய்து கொள்ளச் செய்து, தேசிகரை வணங்கி புலிக்குட்டியைப் பொறுத்தருள வேண்டிக் கொண்டார். தேசிகரும் தியாகராசரின் விண்ணப்பத்தை ஏற்று புலிக்குட்டியை மடத்தில் சேர்த்துக் கொண்டார்.

## பணியில் ஓய்வு:

தியாகராசர் உடல்நிலை தளர்ச்சி காரணமாகப் பணியிலிருந்து 1880, பிப்ரவரி 15-ல் விலகிக் கொண்டு, அந்த இடத்தில் தம் அன்புக்குரிய திரு உ.வே. சாமிநாதையர் அவர்களை நியமிக்கச் செய்தார். ஆறு மாதம் கும்பகோணத்திலிருந்து, பின் திருவானைக்கா புறப்பட்டபோது, அவருக்குப் பிரிவுபசார விழா சிறப்பாக நடத்தப் பெற்றது.

திருவானைக்கா, கொண்டயம் பேட்டையிலுள்ள திருவாவடுதுறை ஆதீனத் திருமடத்தில் சென்று தங்கினார். இவர் மாணாக்கரும் வழக்கறிஞருமாகிய சிங்கமையங்கார் அப்போது 300 ரூபாய் செலவில் மடத்தைத் திருப்பணி செய்து தந்தார்.

## திருவாசகம் உரை எழுத இயலாது:

திரு. பட்டாபிராம பிள்ளை திருச்சியிலும் பிற இடங்களிலும் துணை மாவட்ட ஆட்சித்தலைவராக

இருந்தவர். நல்ல தமிழ் ஆர்வலர். வைணவத்தில் திவ்யப் பிரபந்தங்களுக்கு நல்ல உரைகள் இருப்பதுபோல் தேவார திருவாசகங்களுக்கு இல்லையே என்ற ஏக்கம் அவருக்கு உண்டு. அவர் ஒரு சமயம் தியாகராசரிடம் திருவாசகத்திற்கு உரை எழுதுமாறு வேண்டிக் கொண்டார். பின்பு அவரைப் பார்க்கும்போதெல்லாம் அதை வற்புறுத்தி வந்தார்.

ஒருநாள் தியாகராசர் திரிசிரபுரத்தில் நிகழ்ந்த ஒரு துக்கத்தை விசாரித்து, காவிரியில் நீராடிவிட்டு, ஈர உடையோடு, பாலத்தின் மேல் நடந்து வந்தார். நல்ல பசி, நடு வெய்யில். ஸ்ரீரங்கம் போய் வழிபட்டு, பிரசாதம் உண்டுவிட்டு, எதிரே வண்டியில் வந்து கொண்டிருந்த பட்டாபிராமர், தியாகராசரைப் பார்த்ததும் "என்ன திருவாசகத்திற்கு உரை எழுதத் தொடங்கினீர்களா?" எனக் கேட்டதும், தியாகராசர் கோபத்தோடு, "இனி இப்படித் தொந்தரவு செய்தால் காவிரியில் விழுந்து இறந்து விடுவேன்" என்றார். பட்டாபிராமர் சமாதானம் சொல்லி, பொறுத்துக் கொள்ளுமாறு வேண்டிக் கொண்டார்.

## நடராசர் திருப்பணி:

இரண்டு ஆண்டு காலம் ஓய்வூதியம் (பென்ஷன்) கிடைக்காமல் இருந்து, 1882 மார்ச் மாதம் மொத்தமாக ரூ 403-13-4 கிடைத்ததும் தியாகராசர் மகிழ்ச்சியோடு, பூவாளூர்த் திருக்கோயிலில் நடராசப் பெருமான் சபைத் திருப்பணியைச் செய்தார்.

தாம் சேமித்து வைத்த பொருளில் ஒரு பகுதியைக் கொண்டு பூவாளூர் நடராசருக்கு ஒரு மண்டபம் அமைத்தார்.

எஞ்சிய பணத்திற்கு நிலங்கள் வாங்கி நடராசப் பெருமானுக்கு நாள் வழிபாடும், திருவாதிரை விழாவும் நடத்த ஏற்பாடு செய்தார்.

**நூல் பதிப்புகள்:**

தம் ஆசிரியரின் கோயிலூர்ப் புராணம், திருவிடைக் கழி முருகர் பிள்ளைத்தமிழ், ஆகியவற்றை அச்சிட்டார். திருக்குடந்தைப் புராணத்தை 1883 ஜூனில் அச்சிட்டு வெளியிட்டார்.

திரு ஆனைக்காவல் அகிலாண்டேசுவரி மாலை, திருத்தவத்துறைப் பிராட்டியார் பிள்ளைத் தமிழ் ஆகியவற்றைப் பதிப்பித்தார்.

திருவாவடுதுறை ஆதீன வித்துவான் கச்சியப்ப முனிவர் செய்த பூவாளூர்ப் புராணத்தை 1885, பிப்ரவரியில் வெளியிட்டார்.

தியாகராசருக்கு வரவரக் கண்பார்வை குறையத் தொடங்கியது. உடல் மெலிவுற்றது. எனவே உறவினர்களோடு இருக்கக் கருதி, சிலகாலம் திரிசிரபுரத்தில் இருந்தார். பின்பு உறையூருக்குச் சென்று வசிக்கலானார். கண் சிகிச்சைக்காக 1885 மே மாதம் தம் குடும்பத்தோடு சென்னைக்குப் பயணமானார். சேலம் இராமசாமி முதலியார் மாளிகையில் சிலகாலமும், பின் மயிலாப்பூரில் அரிசிக்காரத் தெருவில் சில காலமும், பின்பு எழும்பூரிலும் தங்கியிருந்தார். இவர் வருகையறிந்து பலரும் வந்து பார்த்து - உரையாடி மகிழ்ந்தனர். பெரியமெட்டில் இருந்த அச்சிறுபாக்கம் குமாரசாமி முதலியார், பிராக்மன் என்னும் ஆங்கிலேய

மருத்துவர் எனப் பலரும் பார்த்து, இனி சிகிச்சை பயனளிக்காது எனக் கூறி விட்டனர்.

பின் திருவாவடுதுறை வந்து, ஆதீனத் தலைவர் பணித்தபடி, அப்போது சின்னப்பட்டமாக நியமிக்கப் பட்டிருந்த அம்பலவாண தேசிகருக்குப் பாடம் சொல்லி வந்தார். செட்டியாரவர்கள் இங்கே வந்திருப்பது மடத்திற்குக் கௌரவமாக இருக்கிறது என ஆதீனத் தலைவர் பாராட்டி மகிழ்ந்தார்கள்.

உடல் நலம் கருதி, தியாகராசர் 1885 ஜுலை முதல் மீண்டும் உறையூருக்கே வந்து வசிக்கலானார்.

## திருக்குறள் திருத்தப்படுவதா?

ஒருநாள் ஓர் ஐரோப்பிய துரை மதுரையிலிருந்து இவரைத் தேடி வந்து, திருக்குறளில் பலவற்றை எதுகை மோனை கருதி திருத்தியிருப்பதாகச் சொல்லி,

தக்கார் தகவிலர் என்பது அவரவர்
மக்களால் காணப் படும்.

என்று தான் திருத்திய குறளில் ஒன்றை முதலில் உரைத்தார். உடனே தியாகராசர் தலையிலே அடித்துக் கொண்டு கோபத்தோடு, அவர் முகத்திலே விழிப்பதே பாவம் எனச் சொல்லி உள்ளே சென்று விட்டார்.

## உ.வே.சா.வின் நன்றி

1887 ல் உ.வே.சா அவர்கள் சீவக சிந்தாமணியைப் பதிப்பித்தபோது, தியாகராசர் சிலரின் உதவியைப் பெற்றுத் தந்ததோடு, கட்டியணைத்துப் பாராட்டி மகிழ்ந்தார்.

1903 ல் உ.வே.சா. தாம் பதிப்பித்த ஐங்குறு நூற்றை இவருக்கு அர்ப்பணம் (காணிக்கை) செய்து மகிழ்ந்தார். அச்செய்தியாவது:

"திருவாவடுதுறை யாதீனத்து மகாவித்துவானும் என் ஆசிரியருமாக விளங்கிய திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுடைய கண்மணி போன்ற முதன் மாணாக்கரும், பாடஞ் சொல்லுதல் செய்யுள் செய்தல் நூலாராய்தல் முதலியவற்றில் அவர்களைப் போன்றவரும், முன்பு கும்பகோணம் கவர்ன்மெண்ட் காலேஜ் தமிழ்ப் பண்டிதரா யிருந்தவரும், வேறு கவலையின்றி நூலாராய்ச்சியையே செய்துகொண்டு காலங்கழிக்கும்படி வற்புறுத்திக் கூறி அவ்வாறே யான் நடத்தற்குக் கரும்பு தின்னக் கூலி கொடுத்தாற் போலத் தம்முடைய அரிய வேலையை அன்புடன் எனக்கு எளிதிற் கிடைக்கச் செய்த வரும், *இரந்துபுன் மாக்கடமை யென்றுந் துதியா, வரந்தர வென் முன்னின்ற வள்ளலுமாகிய திரிசிரபுரம் வித்துவான் ஸ்ரீ தியாகராச செட்டியாரவர்களுடைய பேருதவி எழுமையும் மறக்கற்பாலதன்று. அவர்கள் செய்த மேற்கூறிய அரிய உதவி யில்லையேல் எனக்கும் பழைய தமிழ் நூலாராய்ச்சிக்கும் இக்காலத்தில் யாதோரியைபுமின்றென்பது திண்ணம். ஆதலால், இனியதும் அரியதுமான இந்நூற் பதிப்பை அவர்களிடத்துள்ள நன்றியறிவிற்கு அறிகுறியாக அவர்களுக்கு உரிய தாக்குகின்றேன்."

---

* இரந்து புன்மாக்கள் தமை- கீழோரிடம் யாசிக்காத வண்ணம்.

மேலும், திரு. உ.வே. சா. சென்னையில் தாம் வசித்த இல்லத்திற்கு, தியாகராஜ விலாசம் என்று பெயரிட்டு நன்றி செலுத்திக் கொண்டார்.

மேலும் கும்பகோணம் கல்லூரியில் பி.ஏ. படிக்கும் சைவ மாணாக்கர் ஒருவருக்குத் தியாகராசர் பெயரால் ஆண்டு தோறும் உதவித்தொகை ரூ.48 வழங்கவும் திரு. உ.வே.சா. ஏற்பாடு செய்தார்.

தியாகராசருடைய உடல் வரவர மெலிவடைந்ததோடு, வயிற்றுப்போக்கு முதலிய நோய்களும் பற்றின. அந்த நிலையிலும் தியாகராசர் தம்மிடமுள்ள பணத்தைக் கொண்டு நிலங்கள் வாங்கிப் பூவாளூர் ஆலயத்திற்கு அளித்தார். தேவார திருவாசகங்களைப் படிக்கச் செய்து கேட்டுக் காலம் போக்கி வந்தார்.

தியாகராசருடைய நிழற்படம் ஒன்றும் அமையவில்லை. இப்போது எடுக்க வேண்டும் என திரு.உ.வே.சா. விழைந்தபோது, தம் வயோதிகப் படத்தை எடுக்க இவர் விரும்பவில்லை.

கும்பகோணம் கல்லூரித் தூணில் தியாகராசர் உருவம் செய்யப் பட்டுள்ளது. இது இவருக்குக் கல்லூரியில் இருந்த மதிப்பைக் காட்டுகிறது. கல்லூரியில் பிரிவுபசார விழாவில் இவருக்கு அணிவிக்கப் பெற்றதும், திருவாவடுதுறை ஆதீனம் சீர்வளர்சீர் குருமகா சந்நிதானம் அவர்களால் அளிக்கப் பெற்றதுமாகிய ஏறுமுகக் கண்டியையும் இவர் நடராசப் பெருமானின் திருமேனிக்கே அணிவித்து மகிழ்ந்தார்.

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை ஒருசமயம் சென்னை சென்றிருந்தபோது, மயிலாப்பூரில் சித்திரச் சத்திரம் என்ற சத்திரத்தை நடத்திவந்த வியாசர்பாடி விநாயக முதலியார் பிள்ளையவர்களிடம் மிகவும் ஈடுபாடு கொண்டவரானார். அப்போது பிள்ளை அவர்கள் சித்திரச் சத்திரப் புகழ்ச்சி மாலை என ஒரு இலக்கியம் செய்தார்கள். அன்பர்கள் சிலர் மேலும் ஓர் ஐந்திணைக் கோவை பாட வேண்டும் என வேண்டிக் கொண்டதனால், பிள்ளை அவர்களும் பாடத் தொடங்கினார்கள். 100 பாடல்களோடு அது நின்று விட்டது. பின்பு சென்னையிலிருந்து ஊருக்கு வந்து விட்டதால், தியாகராசரிடம் அதைப் பாடி முடிக்குமாறு பணித்தார்கள். இளமை வேகத்தில் தியாகராசரும் அப்படியே ஏற்றுக்கொண்டு அந்த நூலைப்பாடி முடித்தார். அந்நூல் **வியாசைக் கோவை** என்பதாகும்.

**சிவபதம்:**

தியாகராசர் படுத்த படுக்கையானார். உணவும் செல்லவில்லை. கண் ஒளி மங்கியது. பேச்சு அடங்கியது. அப்போது தேவாரத்தை ஒருவர் படித்தார். அவர் தவறாகப் படித்ததால் தியாகராசர் கையைத் தட்டி குறிப்பாக உணர்த்தினார். பின்பு வேறு ஒருவர் வாங்கிப் படித்தார். அவ்வளவில் 19.1.1888 ல் தியாகராசர் சிவன் திருவடி நீழலை அடைந்தார்.

சருவசித்தில் தை ஏழில் சத்தமியோ(டு) உற்ற
குருவாரந் தோணிநாள் கோடாத் - திருவத்

திடராசன் கல்வித் தியாகரா சன்சீர்
நடராசன் தாளடைந்த நாள்.

எனத் திரு. உ.வே.சா. இந்நாளைக் குறிப்பிடுகின்றார்.

(தோணிநாள் - ரேவதி நட்சத்திரம்; கோடாத் திருவத் திடராசன் - பட்சபாதமற்ற நடுநிலைமைச் செல்வத்தையும் மன உறுதியையும் உடைய அரசனைப் போன்றவன்.)

**சில செய்திகள்:**

தம் ஆசிரியர் திரு மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின்

1. திருநாகைக் காரோணப் புராணம்
2. திருவானைக்கா மாலை
3. சித்திரச் சத்திரப் புகழ்ச்சி மாலை

என்னும் நூல்களுக்கு, இவர் தந்துள்ள சிறப்புப் பாயிரங்களில் இவருடைய வாக்கு வன்மையும் குருபக்தியும் புலப்படுகின்றன. வேதநாயகம் பிள்ளையின் நீதி நூலுக்கும், யாழ்ப்பாணம் தவத்திரு ஆறுமுகநாவலர், சி.வை.தாமோதரம் பிள்ளை, முதலியோர் நூல்களுக்கும் சிறப்புப் பாயிரம் தந்துள்ளார். சவராயலு நாயகர் இரட்டைமணிமாலையும் இவர் பாடியுள்ளார். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் உறையூர்ப் புராணம், திருப் பெருமணநல்லூர்த் திரு வெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ் இவற்றையும் இவர் பதிப்பித்துள்ளார்.

உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

# திருச்சிற்றம்பல வெண்பா அந்தாதி

காப்பு

பூமேவு செம்பொன் பொதுவில்நடிக் கும்பெருமான்
பாமே(வு) அந் தாதி பகரவே - நாமேவும்
அற்பகத்தின் மேவி அமரும் ஒருகோட்டுக்
கற்பகத்தின் அம்பொன் கழல்.

சமயாசாரியார்

மாண்டபுகழ்க் காழி மறைக்குழவும் சூலை கொடுத்(து)
ஆண்டஅர சும்நாவல் அண்ணலு(ம்) - நீண்ட
திருவாத வூர்வேதச் செம்மலும்எஞ் ஞான்றும்
ஒருவாத வூர்என் னுளம்.

தீக்ஷா குரு

துன்னுபெருஞ் செல்வத் துறைசை கயிலையென
மன்னி அமரும்எழில் மாணிக்கம் - மின்னுபுகழ்ப்
பீடார் குருசுப் பிரமணிய தேசிகன்சீர்
பாடார் படித்(து)என் பயன்?

---

காப்பு: ஒரு கோட்டுக் கற்பகம் - கற்பக விநாயகர்; நாமேவும் - நாவில் பொருந்தும்; அற்பகம் - அன்பு + அகம், அன்பான உள்ளம்; கற்பகத்தின் கழல், அந்தாதி பகரவே நாமேவும்.

சமயாசாரியார்: காழிமறைக்குழவு - திருஞானசம்பந்தர். சூலைகொடுத்து ஆண்ட அரசு - திருநாவுக்கரசர். நாவல் அண்ணல் - சுந்தரர், திருவாதவூர் வேதச் செம்மல் - மாணிக்கவாசகர், எஞ்ஞான்றும் - எப்பொழுதும்; ஒருவாத ஊர் - நீங்காத ஊர் (என் உள்ளமேயாகும்.)

தீட்சா குரு: துறைசை - திருவாவடுதுறை; மன்னி - நிலைபெற்று; பீடார் குரு - பெருமைபொருந்திய குரு; சுப்பிரமணிய தேசிகரைப் பாடாதார் படித்துப் பயன் இல்லை.

## நூல்

சீர்பூத்த அம்பலத்தில் தேவிமலர்க் கண்களிக்க
நார்பூத்த இன்ப நட(ம்)நவிலும் - கார்பூத்த
கண்டன் மறைச்சிலம்பு காட்டு மலர்ப்பாதம்
உண்டுதுணை நாயேன் உயிர்க்கு. 1

உயிரே! உயிர்த்துணையே! உண்ணத் தெவிட்டா
அயிரே!தீங் கண்டே! அமுதே! - செயிரே
மருவாச்செந் தேனே!பொன் மன்றத்தில் ஆடும்
ஒருவா!யான் தொண்டன் உனக்கு. 2

உனக்கடிமை யானென்றும் ஓங்குதில்லை நம்பா!
எனக்(கு) இறைநீ என்றும் இசைப்பேன் - மனக்கிசைய
உன்னை அடியேன் ஒருநாள் மறப்பனோ?
அன்னையே அப்பா அருள். 3

அருட்பிழம்பை. ஆனந்த ஆழியை. அஞ் ஞான
இருட்பிழம்பைப் பாற்றும் இனனைத். - தெருட்பிழம்பை
உற்றாரே பற்றும் மன்றத்(து) உம்பர் பெருமானை
மற்(று)ஆரே பற்ற வலர்? 4

---

1. நார்பூத்த - அன்பு நிறைந்த; நவிலும் - செய்யும்; கார்பூத்த - கருமை மிகுந்த.
2. அயிரே - கண்ட சருக்கரையே; செயிரே மருவா - குற்றமே அமையாத; ஒருவா - ஒப்பற்ற பரம்பொருளே.
3. மனக்கு இசைய - மனத்தில் பொருந்திய; நம்பா - விருப்பத் திற்குரியவனே!
4. ஆழி - கடல்; பாற்றும் - கெடுக்கும்; இனன் - சூரியன்; உம்பர் - தேவர்கள்; தெருட் பிழம்பை உற்றாரே - ஞானத் தெளிவை அடைந்தவரே; மற்று ஆரே பற்ற வலர் - பற்ற வல்லவர் வேறு யார்?

வல்லார் முலைச்சசியோன் வாழ்வும் அயன்மால் வாழ்வும்
பல்லார் பணிஅம் பலக்கூத்தன் - எல்லார்
மலரடியை வாழ்த்தி வணங்குபே ரன்பர்
அவர்பெரிய வாழ்விற்(கு) அணு. 5

அணுமலை யாக அணுவாய் மலையே
நணும்அணு வாக நகமாய்ப் - புணரவலன்
ஏவன்?எழில் பொன்மன்றத்(து) இன்பநடம் செய்பெருமான்
ஏவன்?அவன் உம்பர்க்(கு) இறை. 6

இறைவா, உவந்(து) ஏத்தும் இன்பஅன்பர் உள்ளத்(து)
உறைவாய்நீ எல்லாம் உணர்வாய். - மறைவாழ்த்தும்
பொன்னம் பலவா!நின் பூங்கழல்சேர் நாயேனுக்கு
இன்னம் பலவா இடர்? 7

இடர்கெடுமாறு(று) எண்ணுதியேல் என்இனிய நெஞ்சே,
படர்சடைமேல் கங்கை பனிக்க - நட(ம்)நவிலும்
அம்பலத்தான், மேருவில்லாக்(கு) அம்பலத்தான், இன்(பு)ஆய
நம்பலத்தான் சீரே நவில். 8

---

5. வல்லார் முலை சசி - சூதாடு கருவியை ஒத்த முலையை உடைய இந்திராணி; சசியோன் - தேவேந்திரன்; அயன் - பிரமன்; மால் - திருமால்; எல்லார் - ஒளி பொருந்திய; தில்லைக் கூத்தன் அடி வணங்குவோர் வாழ்வை நோக்க, இந்திரன், பிரமன், திருமால் வாழ்வு அணுபோன்றதாகும்.

6. அணுவே மலையாக, அணுக்களால் வாய்க்கப்பெற்ற மலையே அணுவாக; நண்ணும் - பொருந்தும். புணரவலன் - சேரவல்லவன்; நகம் - மலை;

7. உன் திருவடித் தொண்டனுக்கு இடர் இன்னும் பலவா?

8. பனிக்க - குளிர்ச்சியைச் செய்ய; மேரு வில்லாக்கு - முப்புரம் எரிக்க எழுந்தருளியபோது, மேரு மலையை வில்லாக ஆக்கிக் கொண்ட; அம்+பலத்தான் - அழகிய பலமாக இருப்பவன். இன்பு ஆய- இன்ப வடிவான; நம்பலத்தான் - நம் வலிமையாக உள்ளவன்.

நவிலும் மறைக்(கு) எட்டாத நல்லமணி, நால்வர்
கவிபுகலக் கேட்டுக் களிக்கும் - சவிமணி, சீர்
குன்றாப்பே ரின்பங் கொடுக்குமணி, செங்கனக
மன்றாடும் என்கண் மணி. 9

மணிகண்டா! அம்பல வாணா! வருத்தும்
பிணிகண்டு நெஞ்(சு)இரக்கம் பேணாய் - பணிகண்ட
பூணாய்!பொன் மன்றாடும் புண்ணியா! நீ சற்றுக்
காணாய்நா யேன்மறைந்த கண். 10

கண்ணொளிமாய்த்(து) அன்பர் கவிபுகலக் கேட்(டு) அடியேன்
கண்ணொளி மாய்க்கக் கருதினாய் - பண்ணொளிரப்
பாடஅறி யேன்அம் பலவரதா! நின்நடனம்
நாட ஒளிர்கண் நலம். 11

நலம் ஒன்(று) உனக்(கு) உரைப்பேன், நன்நாவே, கேட்டி;
பலம் ஒன்று பேரம் பலவன்.- வலம்ஒன்று
சூலத்தான், மால்குருதி துன்னிநிறை யுங்கரக
பாலத்தான் பொன்னடியே பாடு. 12

---

9. சவி மணி - ஒளிபொருந்திய (அழகு பொருந்திய) மணி, சீர்குன்றாத - சிறப்பு குறையாத; கனகமன்று - பொற்சபை,

10. பணிகண்ட பூணாய் - பாம்புகளை அணிகலனாக அணிந்தவனே; பார்வை மறைந்த கண்ணைப் பார்வை பெறச் செய்தருள்க.

11. சுந்தரர் வரலாறு, நின் நடனத்தை விரும்பித்தரிசிக்க ஒளிவீசும் கண் நலம் ஒளிரச் செய்வாயாக.

12. கேட்டி - கேட்பாயாக, வலம் - வெற்றி; கர கபாலத்தான் - கையில் கபாலத்தை ஏந்தியவன். திருமால் நரசிம்மமாக இரணியனைக் கொன்று, பின் வெறிபிடித்துத் திரிந்தபோது சரபமாக எழுந்தருளி திருமாலின் இரத்தத்தைக் கபாலத்தில் ஏந்தியவன்.

பாடேன் இனியகவி, பாடித் திருமுன்னின்று
ஆடேன், மலர்கொண்(டு) அருச்சியேன், -நீடுமறை
போற்றுகழல் சென்னி புனையேன், பொன் னம்பலவா!
சாற்(று) அடியேன் உய்யுஞ் சரி. 13

சரிந்த பவளச் சடைதிசை யெல்லாம்
விரிந்தாடக், கங்கைதுளி வீசப், - புரிந்தநட(ம்)
மன்றத்தான், முப்புரங்கள் மாயத் தவராம்பொற்
குன்றத்தான், எங்கள் குணக் குன்று. 14

குன்றெடுத்தான் காணாத கோமான்பொன் குஞ்சிதத்தாள்
மன்றெடுத்து நின்றாடு(ம்) மாதேவன்;- என்றும்
இறைவன் எளியேமுக்(கு) ஏத்துமறை தோறு(ம்)
நிறைவன் பொருளாகி நின்று. 15

நின்றேன் திருமுன்னர், நின்று பெருங்கருணைக்
குன்றே! என அழைத்துக் கும்பிட்டேன். - மன்றேய்ந்த
ஆனந்தக் கூத்தன் அழியாத முத்திநல
மேனந்த நல்கான் எனக்கு. 16

கும்பிடவே முத்திநலம் கூடும் எனமறைகள்
நம்பிடவே சாற்றுகின்ற நன்மையின்என் - கம்படுவெந்

---

13. உய்யும் சரி - பிழைக்கும் வழி; சாற்று - சொல்லுக;

14. நடம் புரிந்த; தவர் - வில்; பொற்குன்று - மேருமலை;

15. குன்றெடுத்தான் - திருமால்; இந்திரன் கல்மழை பொழிந்த போது, கோவர்த்தன மலையைத் தூக்கி பசுக்களைக் காத்தவன். குஞ்சிதத்தாள் - தூக்கிய திருவடி; தன்னைப் புகழ்கின்ற வேதங்களின் அனைத்திடத்திலும் பொருளாக நிறைந்திருப்பான்.

16. நந்த - பெருக; முத்தி நலமே நந்த;

17. சிற்றம்பலம் கும்பிடவே முத்தி நலம் கூடும். ஓர் ஐந்து பாய் எழுத்தான் - ஒப்பற்ற ஐந்து எழுத்தாகப் பரவிய (சிவாய நம

தீயெழுத்தை நீரெழுத்தாச் செய்பிரமா ஓரைந்து
பாயெழுத்தான் சிற்றம் பலம். 17

சிற்றம் பலத்தாடுஞ் செல்வா, சிறியேன்செய்
குற்றம் பொறுத்தாள் வாய், கோமானே!-குற்றம்
பொறுப்பாயேல் பொல்லான் பொறுத்தான்என்(று) உன்னை
ஒறுப்பார் ஏவர் இங்(கு) உளர்? 18

உள்ளமே நீகொள் உறுதி, இதன்மேல்என்?
கள்ளமே என்றும் கலவாது - வெள்ளஞ்
சடையணிந்த அம்பலவன் தாள்கமலப் போதைத்
தொடையணிந்த பாவால் துதி. 19

துதிப்போம் அவன் புகழே, சொல்வோம் ஓ வாது
மதிப்போம்எஞ் ஞான்றும் மறவோம் - கதிக்கே
புகவிடுமோ? மன்றாடும் புண்ணியன் எல்லோரும்
நகவிடுமோ நெஞ்சே நமை? 20

நமர்காள்! நமனுக்(கு) என் நம்மிடத்து வேலை?
அமரர்பணி தென்புலியூர் அத்தன் - தமரானோம்;

---

- நமசிவாய) வடிவினன். கம் - தலை; கம்படு - தலையில் அமைந்த; வெம்மையான தீய எழுத்தை நீர்மேல் எழுத்தாக இல்லையாம்படி பிரம்மா செய்வான்;

18. பொல்லாதவனாகிய என்னைப் பொறுத்தான் என்று. ஒறுப்பார் - தண்டிப்பவர்.

19. தாள் கமலப்போதை - திருவடித்தாமரை மலரை; தொடை யணிந்த பா - எதுகை மோனை முதலாம் தொடைகளால் அழகு பொருந்திய பாடல்; இதன்மேல் என்? - இதைவிட மேலானது என்ன உள்ளது?

20. எல்லோரும் நக விடுமோ நமை? - எல்லோரும் ஏளனமாகச் சிரிக்குமாறு நம்மைக் கைவிடுவானோ? விடமாட்டான். ஓவாது - இடையறாது. மன்றாடும் புண்ணியன் நம்மைக் கதிக்கே புகவிடுமோ? அல்லது எல்லோரும் நக விடுமோ? எல்லாம் அவன் விருப்பம்.

அஞ்சா(து) அடர்த்தால் அறைவோம் அயர்த்தனைகொல்?
எஞ்சா(து) எண் மாணிசெயல் என்று. 21

என்(பு) அரவம் பூண்ட இறையைப்பொன் அம்பலத்துத்
துன்(பு) அகலக் கண்டு தொழு(து) ஏத்தும் - அன்பர்
அடிப்பங் கயப்போதை அம்பொன் முடியா
முடிப்பர் அமரர் முடிக்கு. 22

முடியாப் பெருவாழ்வே, முன்னவா, என்றும்
வடியாத ஆனந்த வாரி! - கடியாரும்
பூங்கொன்றைத் தாமா! புலியூராய்! நாயேனைத்
தாங்(கு) ஒன்றைத் தாநீ சரண். 23

சரம் ஒன்று தொட்டுத் தழல்விழிக்கு நேராய்ப்
புரம் ஒன்ற வெந்த புதல்வன் - திறம்ஒன்றக்
காவானைக் காஎன்றல் கைவிட்டுத் தென்புலியூர்
மூவானை நன்நெஞ்சே முன்னு. 24

---

21. நமர்காள் - நமக்கு வேண்டியவர்களே! தமரானோம். அடியவரானோம். அதற்குமேலும் அஞ்சாமல் இயமன் நம்மை வருத்தினால், இடைவிடாமல் சிவனையே எண்ணிய மார்க்கண்டேயருக்காக இறைவன் வெளிப்பட்டு, நின்னைத் தண்டித்த செயலை மறந்தாயோ? என்று அழுத்தமாகச் சொல்வோம்.

22. எலும்பையும், பாம்பையும் அணிகலனாகப் பூண்ட இறைவன். துன்பு - தம் துன்பம்; திருக்கூத்தப் பெருமானைத் தொழுது வணங்கும் அடியவர்களின் திருவடிமலர்களைத் தேவர்கள் தம் தலைக்குப் பொன்மகுடமாக அணிவர்.

23. வடியாத - வற்றாத; வாரி - கடல்; கடியாரும் - மணம் பொருந்திய, தாமா - மாலையை அணிந்தவனே! நீ சரண் - நீயே புகலிடம்; தாங்குகின்ற ஒப்பற்ற பொருளைத் தா.

24. புரம் ஒன்றவெந்த புதல்வன் - முப்புரம் போல வெந்த மன்மதன்; காவான் - திருமால்; காத்தற்கடவுளாயிருந்தும் தன் மகனைக் காக்க முடியவில்லை. மூவான் - மூப்புயில்லாதவன்.

முன்னுவாய் நெஞ்சே! முடிந்தபவம் எத்தனையோ?
இன்னும் வருபவங்கள் எத்தனையோ? - பொன்னம்
பலவனைக்கண்(டு) ஏத்திப் பவந்தொலைத்தல் செய்யா(து)
அலமருவாய் என்னோ அறை? 25

அறைகூவி நின்றே அமர்உவந்(து) ஆண்ட
இறைவர் பலவர் இறந்தார்! - நிறை ஓதம்
நஞ்சம் உண்டும் சாவாத நம்பனைப்பொன் அம்பலத்துத்
தஞ்சமென நெஞ்சேநீ சார். 26

சாரும்பே ரின்ப நலம், தாரணியீர்! நும்மைவிட்டுப்
பேரும் பிறவிப் பெருந்துன்பம். - யாரும்
மதிக்கும் பெருமான்செய் மாணிக்கக் கூத்தைத்
துதிக்கும்பொன் மன்றில் தொழின். 27

தொழுதும் துதித்தும் துகள்இல் அன்பு தாஎன்று
அழுதும் நினை அன்பர் அடைந்தார்; முழுதும்
மறமே புரிவேன் மறலிக்(கு)என் சொல்வேன்?
அறமே திகழ்புலியூ ராய். 28

ஆயேன்சி வாகமத்தை, ஆய்ந்தார் பணிபுரியேன்,
பேயேன்ஆய்ந் தார்போல் பிதற்றுவேன்;- தூயேனும்
அல்லேன், எவ் வா(று) உன்னை ஆய்மலர்கொண்டு அர்ச்சிப்பேன்?
நல்லாய்பொன் னம்பலவா நான். 29

---

25. முன்னுவாய் - நினைப்பாய்; பவம் - பிறப்பு. அலமருவாய் என்னோ அறை? - மனம் வருந்துதல் எதற்கு என்று சொல்வாயாக.
26. அறைகூவல் - வலிய அழைத்தல்; அமர் - போர்; இறைவர் பலவர் - அரசர்கள் பலர்; உவந்து ஆண்ட - மகிழ்ந்து ஆட்சி செய்த; நிறை ஓதம் - நீர் நிறைந்த கடல். தஞ்சம் - அடைக்கலம்.
27. தாரணியீர் - உலக மக்களே! பொன் மன்றில் மாணிக்கக் கூத்தைத் தொழின் பிறவிப் பெருந்துன்பம் பேரும்; பேரின்ப நலம் சாரும். பேரும் - நீங்கும்.
28. துகள் இல் அன்பு - குற்றம் இல்லாத அன்பு; மறம்- பாவம்; மறலி - எமன்;
29. ஆயேன் - ஆராயமாட்டேன்; பணி - தொண்டு; ஆய்மலர் - ஆராய்ந்து எடுத்த மலர்;

நாவிருக்க நீயிருக்க, நாமம் பலஇருக்கப்,
பாவிருக்க நின்பெருஞ்சீர் பாடிடேன் - பூவிருக்கும்
கொன்றையாய், மன்றிடைநின் கூத்தும் தரிசியேன்,
என்(று)ஐயா யான்உய்கு வேன்? 30

ஏனோ பலபவம்ஏற்(று) இன்னா வுறல் வேண்டும்?
மானோஎன் கண்ணாள் மகிழவே - தேனோதான்
என்னும் பிரான்மன் றிடைச்செய் நடங்கண்டு
மன்னும்பே ரின்படையா மல். 31

மலநோய் துரக்கும், மலிபவங்கள் மாற்றும்,
கலர்காணா(து) என்றும் கரக்கும், - மலர்இமையக்
குன்றில் முளைத்த கொடிபடர்ந்த வாமத்து
மன்றில் நடிக்கும் மருந்து. 32

மருந்தே பவப்பிணிக்கு; மன்றத்தில் ஆடும்
அருந்தத் தெவிட்டா அமுதே!- பொருந்தார்
புரம்எரித்த முக்கண் புனிதா! நிற் பாட
வரம்அடியே னுக்(கு) அருளு வாய். 33

வாரணிந்த கொங்கை மலைக்குமரி கண்(டு) உவக்கச்
சீரணிந்த மன்றில் திருநடனம் - நீரணிந்த
பெம்மான் புரிவன்; பெறும்பே(று) இதன்மேல் என்?
அம்மா! கண்(டு) ஏத்தல் அழகு. 34

---

30. நாமம் - திருப்பெயர்கள்; உய்குவேன் - ஈடேறுவேன்;

31. பலபவம் - பல பிறவிகள்; இன்னாவுறல் - துன்பமடைதல்; மன்னும் - நிலபெற்ற;

32. இமையக் குன்றில் முளைத்த கொடி - உமையம்மை; வாமத்து - இடப்பாகத்து. துரக்கும் - போக்கும். மலிபவங்கள் - மிகுந்துவரும் பிறவிகளை; கலர் - பாசம் நீங்காதவர்கள்;

33. பவப்பிணிக்கு - பிறவிநோய்க்கு; பொருந்தார்; பகைவர்;

34. நீரணிந்த - கங்கையை அணிந்த; அம்மா - வியப்புச்சொல்;

அழுத மறைமழவிற்(கு) அம்மை முலைப்பால்
பழுதகலத் தந்தபைம்பொன் பாண்டம் - கழுவுபுனல்
உண்ணும் தவமேனும் உண்டோ? பொன் அம்பலவா?
எண்ணும் அடியேனுக்(கு) இயம்பு. 35

இயலார்ந்த பல்புலவோர் ஏத்தும்இறை வா!பெண்
பயலார்ந்த மேனிப் பரமா! - மயலார்ந்தோர்
காணாத அம்பலவா! கல்நெஞ்சேன் அன்பில்லேன்
நாணா(து) அடிமையென்பேன் நான். 36

நானே தவமுடையேன், நானே தவமுடையேன்,
தேனே! அமுதே! செழும்பாகே! - ஆனாத
செல்வமே! என்றுகவி செப்பச்சிற் றம்பலத்தான்
நல்வரந்தந்(து) ஆண்டமையால் நன்று. 37

நன்றோ புலவீர்? நலமிலாப் பேதையரைக்
குன்றேய்புயா! என்று கூறுவீர்;- கொன்றைமலர்த்
தாமத்தாய்! தென்புலியூர்ச் சங்கரா! வெற்பரசி
வாமத்தாய்! என்றல் மறந்து. 38

மறந்தும் நினை யன்றி வழுத்துமோ என்நா
இறந்து பிறப்பாரை என்றும், - சிறந்ததே
மாங்கனிஉண் வாய் உணுமோ வன்காஞ் சிரங்காய் பொன்
ஓங்கல்நிகர் மன்றாய் உவந்து. 39

---

35. மறைமழவு - திருஞானசம்பந்தர்;

36. இயலார்ந்த - இலக்கணப் புலமை நிறைந்த; பயலார்ந்த - பாதி நிறைந்த; மயல் - மயக்க உணர்வு; நாணாது - வெட்கப்படாமல்;

37. ஆனாத - அளவுகடந்த;

38. நலமிலரை - உடல் வலிமையாகிய நலம் இல்லாதாரை; குன்று ஏய்புயா - மலையை ஒத்த தோள்களையுடையவனே. தாமத்தாய் - மாலை உடையவனே! வெற்பரசி வாமத்தாய் - மலை மகளை இடப்பாகம் கொண்டவனே.

39. பொன் ஓங்கல் நிகர் - பொன்(மேரு)மலையை ஒத்த; காஞ்சிரங்காய் - எட்டிக்காய்; தேமாங்கனி - இனிக்கும் மாங்கனி.

உவந்துநினைப் பூசை உஞற்றல் ஒழிந்தேன்,
பவந்தொலையு மாறு படரேன். - தவந்தானம்
சிந்தியேன், தென்புலியூர்த் தேவா!நின் சேவடிகள்
வந்தியேன் உய்வேன்கொல் மற்று? 40

மற்(று) என் னுறல் வேண்டும்? வந்தித்தால் முத்திநலம்
சிற்றம் பலத்தாடுந் தேவர்பிரான் - உற்றருள்வன்
என்றால் விரையார் எவரே? மடநெஞ்சே!
சென்(று) ஆடல் கண்டுகதி சேர். 41

சேரார் பவப்பெருநோய் தீரார்;எவ் வா(று)அந்தோ
வாரார்பே ரானந்த வாரிபுகல்?- நீரார்ந்த
செஞ்சடையான் ஓரிருவர் சேவிக்க மன்றாடும்
மஞ்சுடைய தில்லை வனம். 42

வனமடைந்து புன்சருகு, வன்காய், கிழங்(கு) உண்டு
இனன் எதிர்நின்(று) ஓர்கால் எடுத்துங் - கனலிடையே
சேர்ந்தும் தவஞ்செயல்என்? தில்லைமன்றில் எம்பெருமான்
ஆர்ந்தநடம் காணல் அயர்ந்து. 43

அயில்வே லனுக்கும் அரிமதர்க்கண் பாவாய்!
மயில்ஏய்மென் சாயல் மடந்தாய்!- குயிலே!இன்

---

40. உஞற்றல் - செய்தல்; படரேன் - முயலேன்; வந்தியேன் - வணங்க மாட்டேன்.

41. விரையார் - விரைந்து செல்லாதவர், மட நெஞ்சே அறியாமையுடைய நெஞ்சே.

42. தில்லை வனம் சேரார் எனக் கொண்டு கூட்ட வேண்டும். ஓர் இருவர் - பதஞ்சலி, வியாக்கிர பாதர்.மஞ்சு - மேகம்;

43. இனன் - சூரியன், கனல் - நெருப்பு, ஆர்ந்த - நிறைந்த, அயர்ந்து – மறந்து;

44. அயல்வேல் அனுக்கும் - கூர்மையான வேல் ஒப்பாகாதபடி தோற்கச் செய்யும். அரிமதர்க்கண் - செவ்வரிபடர்ந்த

சொல்லாய்! எனப் பலகால் சொல்லும்; பொன் மன்றாடல்
வல்லாய் எனில்குறை என் வாய்க்கு? 44

வாய்மை அன்பு சற்றுமிலேன் வன்நெஞ்சப் பாறையிடைச்
சேய்மையின்றிப் பூத்துத் திகழுமோ? - தூய்மைதிகழ்
குன்றாத பேரன்பர் கோதில்உள வாவிமலர்
மன்றாடு பூந்தா மரை. 45

மறைஎகினம் வான்பறந்தும், வன்றிமண் கீண்டும்
பிறைமுடியும் தாளும் பெறாமல் - நிறைபெருமான்
பற்றாத சிற்றம் பலத்துள் எங்ஙன் நின்றாடும்?
முற்றா முலையாய், மொழி. 46

மொழியத் தெவிட்டா முதல்வ! நின்சீர் முற்றும்
மொழியப் புகல்வேன்என்(று) உன்னின் - இழிவுடைய
சிற்றெறும்பு வாரிமுற்றும் சேரஉண்ண உன்னாதோ?
சற்றுரைசிற் றம்பலநா தா. 47

---

செழுமையுடைய கண்கள். பெண்களைப் பலவாறு வருணிக்கும் வாய் இறைவனைப் புகழ்ந்தால் என்ன குறை?

45. கோதில் - குற்றம் இல்லாத; உளவாவி - உள்ளமாகிய குளத்தில்; சேய்மை - தொலைவு, மன்றில் ஆடும் நடராசராகிய தாமரை நிறைந்த பக்தியுடையோர் உள்ளத்தில் மலரும். அது என் வலிய பாறையாகிய நெஞ்சத்திலும் மலருமோ? சேய்மையின்றி - காலநீட்டிப்பு இல்லாமல் - விரைந்து.

46. மறை எகினம் - பிரமன் ஆகிய அன்னப்பறவை; வன்றி - பன்றி (திருமால்); கீண்டும் - தோண்டியும்; பிரமனாலும் திருமாலாலும் அடிமுடி தேடிக் காண முடியாதவாறு மண்முதல் விண்வரை நிறைந்த அவ்வளவு பெரியவன் சின்ன அம்பலத்தில் எவ்வாறு நின்று ஆடுகின்றான். மொழி - சொல்வாயாக. பற்றாத - இடம் போதாத; முற்றா முலையாய் - மகடூஉ முன்னிலை;

47. உன்னின் - நினைத்தால், வாரி - கடல்; முற்றும் - முழுமையாக; உன்னாதோ - நினைக்காதோ? சற்றுரை - சற்றே உரைப்பாயாக.

தாமரைக்கண் சூன்(று) ஒருவர் தாளிட்டார்; மற்றொருவர்
மாமரைக்கண் சூன்றுகண்வைத் தார்; இவருள்-ஆமொருவர்ப்
பொன்னடிவைத் தாய், ஒருவர்ப் போக்கினாய் ஆழிகொடுத்து,
என்னஅறம் மன்றுடையாய் ஈது? 48

ஈதே கருணை? இறைவா! பொன் அம்பலவா!
தீதே தமியன்நனி செய்திடினும் - போதே
அனையநின்பொற் பாதம் அடைந்த பின்னும் தீய
வினையகற்றி ஆளா விடின். 49

விட்டோம் பயனில்லா வீணர் உறவெல்லாம்;
தொட்டோம் இன் பஞ்செய்யும் தொண்டுகளை; - நட்டோம்நல்
தொண்டர் பெருங்குழுவைத்; தூய நடராசன்
அண்டர் தொழும் மன்றம் அடைந்து. 50

அடைந்தார் எவரேனும் ஆனந்த வெள்ளம்
குடைந்தாட வம்மின்கள், கும்பிட்(டு) - உடைந்தோட
நும்பிறவி ஓட்டுமின்கள் என்று நுவலுதல் போல்
அம்பலத்தில் ஆடும் மான். 51

---

48. சூன்று - தோண்டி யெடுத்து; தாளிட்டார் - திருவடியில் அர்ச்சித்தார் (திருமால்); மற்றொருவர் - கண்ணப்பர், மா மரைக்கண் - பெருமை பொருந்திய தாமரை போன்ற கண்; ஆழி - சக்கரம். இருவரும் கண்ணைத் தோண்டிய செயல் செய்தாலும் திருமாலுக்குச் சக்கரம் தந்து அனுப்பினாய். கண்ணப்பரைத் திருவடியில் வைத்துக் கொண்டாய்; ஒரே செயல் செய்த இருவருக்கும் வெவ்வேறு பயன் தந்தது என்ன அறம்? (திருமாலின் வழிபாடு ஒன்றை எதிர்பார்த்தது. கண்ணப்பர் வழிபாடு பயன் கருதாதது.)

49. நனி - மிக; போதே அனைய - (தாமரை) மலரைப் போன்ற; நின் திருவடி அடைந்த பின்னும் என் வினை அகற்றி ஆளாவிடின் இதுவோ கருணை?

50. தொட்டோம் - தொடங்கினோம், நட்டோம் - நட்பாக, (உறவாக) ஆக்கிக் கொண்டோம், அண்டர் - தேவர்கள்.

51. மான் என்பது இறைவனைக் குறிக்கலாம். இறைவன் கையில் இருக்கும் மானையும் குறிக்கலாம்.

அரவமைந்த செஞ்சடையான் அம்பலவன் என்னோ
புரவமைந்த வள்ளன்மை பூண்டும் - இரவமைந்தே
ஏற்றான் தலைக்கலங்கை எண்ணான்(கு) அறஞ்செய்ஓர்
கூற்றாள்உள் நாணங் கொள. 52

கொள்ளக் குறையாத கோதில் அருட்கடலே!
எள்ளப் படாதபே ரின்பமே!- வெள்ளம்
முடித்த சடைமுடியாய்! முன்னவா! மன்றில்
நடித்தகழல் நாயேற்கு நல்கு. 53

நல்குவாய் என்(று) உன்னை நம்பினேன்; அன்பர் உளத்(து)
அல்கும் இருள் ஓட்டும் அவிர்ஒளியே!- மல்குதிருச்
சிற்றம் பலவ! அருள் செய்யாய்! சிறியேன்செய்
குற்றம் குணமாக் கொண்டு. 54

கொண்டோம் பொன் மன்றாடும் கூத்தன் கழல்சிரமேல்;
விண்டோம் நெடுந்துயர்செய் வெம்பிறவி- அண்டருள்ளே
நம்பேறு யார்பெற்றார் நாடித் துருவிடினும்?
வம்பேறு கொங்கைமட வாய். 55

---

52. புரவு - பாதுகாப்பு; வள்ளன்மை - கொடை; இரவு அமைந்து - பிச்சை எடுத்தல் பொருந்தி. ஏற்றான் தலைக் கலங் கை - பிரமன் தலையோட்டைப் பாத்திரமாகக் கையில் கொண்டு பிச்சை ஏற்றான். ஓர் கூற்றாள் - இறைவனின் ஒரு பாதியில் அமைந்தவள் உமையம்மை; உமை 32 அறங்களைக் காஞ்சியில் இருநாழி நெல் கொண்டு செய்தாள்.

53. கோதுஇல் - குற்றம்இல்லாத; எள்ளப் படாத - இகழப் படாத;

54 அல்கும் - தங்கும்; அவிர் - ஒளிரும்;

55. சிரமேல் - தலைமேல்; விண்டோம் - நீங்கினோம்; அண்டருள்ளே - தேவர்களில்; நாடித் துருவிடினும் - ஆராய்ந்து பார்த்தாலும்; வம்புஏறு - கச்சு அணிந்த; (மகடூஉ முன்னிலை)

வாயார வாழ்த்துவார், மன்னும்நடங் கும்பிடுவார்,
தோயாஆ நந்தம் துளைகுவார்;- ஓயாது
நின்றுருகு வார், ஐய! நின் அன்பர்; யானார்பொன்
மன்றுபுக நின்தாள் மதித்து? 56

மதிதவழும் செஞ்சடையும், வான்புலவர் பாடுந்
துதிதவழும் பூந்தாளும் தோற்றிக் - கதிதவழும்
அம்பலத்தில் நின்றாடும் அப்பன் அயன்திருமால்
வெம்பி விண்மண் கீள விடுத்து. 57

விட அரவஞ் சென்னி மிலைந்து, புலியும்
பட அரவும் கண்டு பணிய - நடம் நவில்வோன்
அம்பலங்கண்(டு) ஏத்தும் அதுவே அறிஞர்அடை
செம்பலன்,வே(று) என்? நெஞ்சே தேர். 58

தேர்ந்துணர்ந்த மெய்ஞ்ஞானச் செல்வர் எலாங்கூடி
வார்ந்தபுகழ் வாயார வாழ்த்தியே - நேர்ந்துநின்தாள்
மன்றடைந்து கும்பிட்டு வாழ்வுற்றார்; யான்ஐய!
என்றடைவேன் நின்தாள் இணை? 59

---

56. தோயா - இதுவரை தோயாத; துளைகுவர் - மூழ்குவர்; ஓயாது - இடை விடாமல், யான் ஆர் என, அன்பர்களோடு ஒப்பிட்டுத் தன் தகுதியின்மையைக் கூறுகின்றார்.

57. வெம்பி - மனம் வெதும்பி; கீள - கிழிக்குமாறு; பிரமன், திருமால் இருவரையும் தேடுமாறு விட்டுவிட்டு, நடராசன் அன்பர்கள் வழிபட மன்றில் முடியும் அடியும் தோன்ற நிற்கிறான், தோற்றி - தோன்றச் செய்து.

58. விட அரவம் சென்னி மிலைந்து - நச்சுப் பாம்பினைத் தலையில் சூடி, புலியும் - வியாக்ர பாதரும், படஅரவும் - பதஞ்சலியும்; செம்பலன் - செம்மையான பயன்; வேறு என்? அதை விடச் சிறந்தது வேறு என்ன உள்ளது. தேர் - ஆராய்ந்தறிக.

59. தாள் இணை - இரண்டு திருவடிகள்; என்று அடைவேன்? வார்ந்த புகழ் - உயர்ந்த புகழ்; நேர்ந்து - விரும்பி;

இணையில்லா நின்அன்பர் எய்தும் பெருவாழ்வு
அணையநா யேன் எண்ணின், ஐய! - பணையிற்
குரண்டம்வான் கங்கைநதி கூடநினை யாதோ?
வரண்டவாத் தென்புலியூ ராய். 60

ஆயர் மனையில் அளைதிருடிக் கட்டுண்ட
மாயன்பொன் மன்றம் மருவியும் - தாயனையான்
தன்னைக்கும் பிட்(டு) இன்பஞ் சாரா(து) இனும்துயில்வான்
என்ன புதுமை இது? 61

இதுவோ பெருமை? இரணியமன் றாடும்
விதுவேய் சடில! விமலா! - மதுவேய்நின்
பொன்னிதழிப் பூந்தார் புரிந்தருளாய்; செம்பவள
மன்னிதழி உய்யும் வணம். 62

வண்ணங் கரிய மணி மிடற்றாய்! துன்புறுவேன்
எண்ணம் தெரியா(து) இருக்கின்றாய்; பண்ணைவயல்
ஆர்மன்றத்(து) ஆடும் அரசே! நினையெல்லாம்
ஓர் பெருமான் என்ப(து) எவ்வா(று) ஓது? 63

---

60. அரண்தவா - பாதுகாப்பு குறையாத (தென்புலியூர்) பணையில் - வயல்களில் உள்ள; குரண்டம் - கொக்கு;

61. அளை - வெண்ணெய்; மருவியும் - சேர்ந்தும்; பொன்னம்பலத்தின் எதிரே திருச் சித்திர கூடத்தில் திருமால் பள்ளி கொண்டுள்ளமையைக் கூறியது.

62. இரணிய மன்று - பொன்மன்று; விதுவேய் சடில - சந்திரனைச் சூடிய சடையினனே! மது ஏய் - கள் (தேன்) பொருந்திய; அகப் பொருள் பாடல்; பவளம் போன்ற உதட்டினை உடைய இப்பெண் உய்யுமாறு கொன்றைமாலை தந்தருள்க.

63. வயல் ஆர் - வயல் நிறைந்த; என் எண்ணம் தெரிந்து ஆண்டருளாத நின்னை ஓர் பெருமான் என்று எவ்வாறு சொல்வது?

ஓதா(து) உணர்ந்த ஒருவர் உண. ஞானப்பால்
கோ(து) ஆரா மல்கொடுத்த கோமானே! - தீதாரா
மன்றாடு மாமணியே! மாணிக்க மே! அடியேன்
குன்றாநோய் தீர்த்(து)அடிமை கொள். 64

கொண்டால் எனையடிமை கோபிப்ப ரோ அடியார்?
தண்டா அருட்பெரிய சாகரமே!- கண்டார்
பிரியாப்பொன் மன்றாடும் பெம்மானே! தீர்நோய்
எரியாய் வருத்தும் எனை. 65

என்னேநின் உள்ளம் இரங்கா(து) இருக்கின்றாய்.
பொன்னே! மணியே! புகழமுதே! - இன்னே
எனைநோய்தீர்த்(து) ஆளின் மன்(று) ஈசா! நினக்குப்
பினைவேறுண்டோ பெருஞ்சீர்? பேசு. 66

பேசுவேன் நின்பெருஞ்சீர். பேயேனை ஆட்கொள்வாய்.
கூசுவேன் மற்றையர்சீர் கூறவே. - நேசமொடு
நம்பினரைக் கைவிடுதல் நல்லறமோ? மன்றாடும்
எம்பெருமான் நீ சற்(று) இசை. 67

இசையார்ந்த தென்தில்லை ஈசா! நின் அன்பர்
நசையார்ந்த பாக்கள் நவில்வார். - வசையார்ந்த
நாயேன்அவ் வாறு நவிலும் அன்(பு) உள்ளேனோ?
தீயேன்என் செய்வேன்நீ செப்பு. 68

---

64. கோது ஆராமல் - கறந்த பாலாக.

65. தண்டா - குறையாத; சாகரம் - கடல்; நோய் தீர் - நோயைத் தீர்த்தருள்க; எரியாய் - நெருப்பாய்; (எனை வருத்தும்)

66. இன்னே - இப்பொழுதே; என் நோய் தீர்த்து ஆண்டால் அதுவே நினக்குப் பெரும் புகழாகும்.

67. இசை - சொல்க. நேசம் - அன்பு

68. இசையார்ந்த - புகழ்நிறைந்த; நசையார்ந்த - விருப்பம் நிறைந்த; வசை - பழி;

செப்பும் பலமறையுஞ் சென்றேத்தும் தில்லைவனத்து
ஒப்பும் உயர்வும் ஒருவிநிற்கும் - அப்பனே!
நின்னடியேன் துன்புறுதல் நேர்கண்டால் மற்றடியார்
உன்னைஏ சாரோ உரை? 69

உரையாத பொன்னே! ஒளிர்சாணை யிட்டுக்
கரையாத மாணிக்கக் கல்லே! -விரையார்ந்த
வார்குழலாள் நோக்கப்பொன் மன்றா(டு) அருட்கடலே!
யார்துணைநா யேனுக்(கு) அருள்? 70

அருளே உருவாய் அமைந்(து) இடப்பால் நின்று
பொருள் ஏய்நின் ஆடல் புரிந்து - தெருளேய
நோக்(கு) அம்மை நிற்கு நுவலாளோ மன்றாடீ
காக்க வென்றே என்துயரங் கண்டு. 71

கண்டும்தே னும்பாலும் காமர் பசுங்கிளியும்
கொண்(டு)உவ மானஞ் சொல்லக் கூடாத -மண்டுசுவை
என்தாய் சொல் நின்செவிகட்(கு) ஏறாமை என்கொடுமை?
மன்றாய்! அமரர்தலை வா! 72

---

69. ஒருவி நிற்கும் - நீங்கி நிற்கும்.

70. உரையாத - மாற்று உரைத்துப் பார்க்காத; கரையாத - தீட்டாத (இயல்பாகவே ஒளி அமைந்த) விரையார்ந்த - மணம் நிறைந்த; வார்குழலாள் - நீண்ட கூந்தலையுடையவள் (உமையம்மை) நீயே எனக்குத் துணை.

71. இடப்பால் - இடப்பக்கம்; பொருள்ஏய் - பொருள் பொருந்திய; (உயிர்கட்கு அருள் செய்வதற்காகச் செய்யும் ஐந்தொழில் நடனம்) புரிந்து - விரும்பி; நிற்கு - நினக்கு; நுவலாளோ - சொல்ல மாட்டாளா? மன்றாடீ - மன்றில் ஆடுபவனே.

72. கண்டு - கற்கண்டு. காமர் - அழகிய. மண்டு சுவை - சுவை நிறைந்த.

வாமான் மறையாக்கொள் மாதேவா! மன்றாடும்
கோமானே! எங்கள்குணக் குன்றமே! - ஏமாந்து
நின்னருளை நாடியே நிற்பேன் அடைந்திலேன்
என்ன வறுமை இயம்பு? 73

இயம்ப நனிஇனிக்கும் இன்னமுதே! பூவார்
கயஞ்சுலவு தில்லைக் கரும்பே!- நயங்குவை
நின்னைப் புகழ நெடும்பாக் கியம் பெற்றேன்
என்னை குறைசொல் எனக்கு? 74

எனக்குநின் பூந்தாள்அன்(பு) எய்தாத(து) என்கொல்?
மனக்(கு) இன்(பு) அருளு(ம்) மணியே! - புனக் கொன்றைப்
பூந்தாமா! மன்றாடும் புண்ணியா! வானமரர்
ஏந்தால்! கயிலைஇறை யே. 75

ஏதோநின் நாமம் இயம்பத் தெரிந்திலேன்;
தீதோவுபாடல் எங்ஙன் செப்புவேன்?- மாதோடு
நின்றுதில்லை மன்றாடும் நின்மலா! நின் அருளை
என்று பெறு வேன்தீய னேன்? 76

---

73. வாமான் மறையாக் கொள் - தாவும் குதிரையாக வேதங்களைக் கொண்ட; நீயோ அருள்வள்ளல்; ஆனால் நான் அருளை அடையவில்லை; இது என்ன வறுமை?

74. பூவார் கயஞ்சுலவு - பூக்கள் நிறைந்த நீர்நிலை சூழ்ந்த; பாக்கியம் - பேறு. எனக்கு ஒரு குறையுமில்லை.

75. பூந்தாள் - பூப்போன்ற திருவடிக்(கு); ஏந்தால் - தலைவனே! கொன்றைப் பூந்தாமா - கொன்றைப் பூமாலை யணிந்தவனே.

76. நாமம் - திருப்பெயர்; தீது ஓவு - தீது நீங்கிய; உன் பெயரைக் கூடச் சொல்லத் தெரியாதவன் உன்னை எப்படிப் பாடிடுவேன்?

ஏனக் கொம்(பு) என்றும் இலங்கும் மணிமார்பா!
கூனற் பிறைவேணிக் கோமானே! - கானத்(து)
உறை வேடர் கோமான் உரைக்கும்இன் சொல்லோ
நிறைமன்றத் தாய்!என்சொல் நிற்கு. 77

நின்னைப் பிதா என்றும் நின் வாமத் தேஅந்தமலைப்
பொன்னை அன்னை என்றும் புகல் மறை - என்னை
ஒழித்துச்சொல் விற்றோ? உவந்து பொன் மன்றாடும்
சுழித்தபுனல் செஞ்சடையாய் சொல். 78

சொல்லச் சுருங்காத தூயபுக ழாய்! மதனை
வெல்லத் திறந்த விழியுடையாய்!- கொல்லும் முனைச்
சூலத்தாய்! தென்தில்லைத் தொல்நகராய்! நற்கரக
பாலத்தாய் நாயேனைப் பார். 79

பார் சூழ்தென் தில்லைப் பரமா! செழுங்கொன்றைத்
தார் சூழும் செஞ்சடிலச் சங்கரா!- சீர்சூழ்ந்த
நின்அடியார் ஏத்தி நிகழ்த்தியிடும் நின்செய்ய
பொன்அடிக்கு யானார் புகல்? 80

---

77. கானத்து - காட்டில்; கூனல்பிறை - வளைந்த பிறை; ஏனம் - பன்றி; நிற்கு - நினக்கு; என் சொல் நினக்கு வேட்டுவர் கோமான் இன்சொல் போல் உள்ளதோ? வேட்டுவர் கோமான் - கண்ணப்பர். என்சொல் கண்ணப்பர் இன்சொல் போல் ஆகாது.

78. பிதா - தந்தை; வாமத்தே - இடப்பாகத்தே; மலைப்பொன் - பார்வதி; புகல் மறை - சொல்லும் வேதங்கள். எல்லா உயிர்க்கும் நீங்கள் அம்மையப்பர் என்றால் அடியேன் உம் மகன் அலனோ? சொல்லுங்கள்.

79. மதனை - மன்மதனை; நற் கர கபாலத்தாய் - நல்ல பிரம கபாலத்தைக் கையில் ஏந்தியவனே.

80. பார் - உலகம்; தார் - மாலை; சடிலம் - சடை; நின் திருவடிக்கு அடியேன் என்ன தகுதியுடையேன்; புகல் - சொல்லுவாயாக.

புகலும்மறை ஏத்தும் பொது நடிக்கும் எம்மான்
இகலும் மதனை எரித்தும் - அகம்மகிழ
வாமத்து மின்கொண்டாய், மன்னுதுற வோர்உன்னைக்
காமங்கொண்(டு) ஏத்தல் என்ன காண்? 81

காண்போர்க்கு வீடளிக்கும் கற்பகமே! நின்துதிக்கும்
மாண்போர்க்(கு) அடைபயனும் மற்றுண்டோ? - பூண்பாரக்
கொங்கையுமை காண, மனறில் கூத்தாடும் கோமானே!
செங்கை அனல் ஏந்து(ம்)அர சே. 82

சேவேறி அன்பர்முனம் செல்லும்அர சே! வேத
மாவேறிப் பாண்டியனை வாழ்வித்தாய்-பூவேறி
வண்டுதுவைக் கும்சோலை மன்றாடும் மாமணியே
அண்டும்எனை ஆடல்குறை யா? 83

ஆத்தி மரத்தின் அடியில்நீ சென்றிருந்து
ஏத்துதொண்டர் ஈன்ற இளஞ்சேயைக்-காத்தல் ஒழிந்(து)
ஈர்ந்(து)ஆக்கச் செய்தாய்மன் றீசா! நின் ஓர்பாகம்
சேர்ந்தாள் பொறுத்தாளோ? செப்பு. 84

---

81. பொது - திருச்சிற்றம்பலம்; இகலும் - போரிடும்; வாமத்து - இடப்பாகத்து; மின் - மின்னல்போன்ற உமையம்மை; காமங்கொண்டு - விருப்பங்கொண்டு;

82. அடை பயனும் மற்றுண்டோ? - அடைகின்ற பயன் வேறு உண்டோ? இல்லை.

83. சே - காளை; வேத மா - வேதமாகிய குதிரையில். (மாணிக்கவாசகர் வரலாற்றில்) அண்டும் - நின்னை அடையும். ஆடல் - ஆண்டுகொளல்.

84. சிறுத்தொண்டர் - தன்மகன் சீராளனைக் கறி சமைத்திட்ட வரலாறு. ஈர்ந்து - அரிந்து; நீ குழந்தையை அறுத்து சமைத்துக் கேட்டாலும் உன்னைச் சேர்ந்த தாய் எப்படிப் பொறுத்துக் கொண்டாள்?

செம்பொன் வரைவளைத்துத் தீயர் புரம் எரித்தாய்;
அம்பொன்மன் றத்துஎன்றும் ஆடினாய் - வம்பொன்று
கொம்மை முலைப்பரவை கூடத்தில் தூது சென்றாய்
அம்மைஊ டில்செல்வார் ஆர்? 85

ஆரேந்து செஞ்சடையாய்! ஆணிப்பொன் மன்றாடீ!
கூரேந்து சூலம்முதல் கொண்டிருந்தும் - ஏரேந்து
சித்தசனைக் கண்ணில் திரிபுரத்தை மூரலில்தீ
உய்த்(து) எரித்த காரணம் என்? ஓது. 86

ஓதாது நின்புகழை ஓதத் துணிந்(து) எழுந்தேன்
கோதாரும் என்புன்மை கொண்டருளாய் - போதாரும்
வேணிப்பொன் கொன்றையுடன் வெள்ளெருக்கும் கொண்டனையே
ஆணிப்பொன் அம்பலத்(து)ஐ யா! 87

ஐயாற்றில் நாவரசர்க்(கு) அம்கயிலைக் காட்சிதந்தாய்.
நையாற்றில் என்னை நலியவிடா(து)-ஐயா!
திருத்தில்லை மேவும் சிவனே! எனைஆள்
கருத்(து) இல்லை கொல்லோ? கரை. 88

---

85. செம்பொன் வரை - மேருமலை; தீயர்புரம் - முப்புரம்; சுந்தரரோடு அவர் மனைவி பரவை நாச்சியாரைச் சேர்த்து வைக்கத் தூது சென்றாய், நின் மனைவி உமையம்மை நின்னிடம் ஊடல் கொண்டால் நினக்காகத் தூது செல்பவர் யார்?

86. ஆர் - ஆத்தி (மாலை); ஏர் ஏந்தும் சித்தசன் - அழகிய மன்மதன்; திருமாலின் சித்தத்தில் தோன்றியவன், நம் மனத்திலும் ஆசையைத் தோற்றுவிப்பவன். ஆயுதங்கள் இருந்தும் பயன்படுத்தவில்லை. ஆணிப்பொன் - மாற்றுயர்ந்த பொன்.

87. கோதாரும் என் புன்மை - குற்றம் நிறைந்த என் புன் சொற்களை; போதாரும் வேணி - பூக்கள் நிறைந்த சடை; பொன்னிறக் கொன்றையுடன் வெள்ளெருக்கையும் ஏற்றுக் கொண்டது போல உயர்ந்த அருளாளர்கள் புகழ்ப் பாக்களுடன் என் பாக்களையும் ஏற்றுக் கொள்வாய் என்பது.

88. நையாற்றில் - மனம் நைந்து போகும் வழியில்; ஆள் - ஆண்டுகொள்ளும்; கரை - சொல்லுக.

கறைமருவு கண்டத்தன், காமர்நதியோடு
பிறைமருவு செவ்வேணிப் பெம்மான். - நறைமருவு
சோலைசூழ் தென்தில்லைத் தொன்னகரான், வெள்ளெலும்பு
மாலையான் ஈவன் வரம். 89

வரமேய்ந்த தென்தில்லை மன்னா!மண் ணுண்ட
சரமேய்ந்த செங்கைத் தலைவா!- புரமேய்ந்த
நின்வாய் நெருப்பிற்கு நேராகி நிற்காதோ?
என்வாய் பவமாம் எயில். 90

எயில் சூழ்ந்த தென்தில்லை ஈசா! இமய
மயில் சூழ்ந்த வாமத்து வள்ளால்! - அயில்சூழ்ந்த
சூலப்படையாய்! நின் தொல்புகழ்சொல் என்னைஅயன்
மாலப் படைப்பானோ மற்று? 91

மற்றும் பெறும்பயன்என்? வன்னெஞ்சே! பூஞ்சோலை
சுற்றும்தென் தில்லைச் சுடர்மன்றில் - உற்று
நடமாடும் எம்பெருமான் நற்குஞ் சிதத்தாள்
திடமாரச் சேவை செயின். 92

---

89. காமர் - அழகிய; செவ்வேணி - செஞ்சடை; நறைமருவு - தேன் பொருந்திய; தொல் + நகரான்; வரம் ஈவன்;

90. வரமேய்ந்த - மேன்மை பொருந்திய; மண் உண்ட சரம் - திருமால்; திரிபுரம் எரிக்க எழுந்தருளியபோது திருமால் அம்பாகி இருந்தார் (சர நாராயணப் பெருமாள்); திருமால் கண்ண அவதாரத்தில் மண் உண்டவர். பவமாம் எயில் - பிறப்பாகிய மதில். சிரிப்புத் தீயால் முப்புரம் எரித்ததுபோல் என் பிறப்பையும் எரிப்பாயாக!

91. எயில் - மதில்; இமயமயில் - உமையம்மை; அயில் - கூர்மை; மால - இவ்வுலகில் மயங்கி அழியுமாறு.

92. குஞ்சிதத் தாள் - தூக்கிய திருவடி. திடமார - உறுதி நிறைய.

செய்யில் வளைமுரலும் தென்தில்லைத் தொல்நகரோ?
மையில் கயிலாய மாமலையோ?- பொய்யில்லா
வேதமுடி யோ?தீயேன் வெய்யஉள மோ? பரமன்
ஏதமின்றி வாழும் இடம். 93

இடத்துமான் கொண்ட இறைவா! வுதீசி
வடத்துநிழல் மேய மருந்தே!- தடத்துக்
கயல்பாயும் தில்லைக் கருத்தா! உளத்து
மயல் பாயா வண்ணம்அருள் வை. 94

வையம் பரவ வளரும் மணிமன்றில்
ஐயன் கழல்நிறுவி ஆனந்தம் - செய்யும்
திருக்கூத்தை முன்னின்று சேவிக்கும் மெய்யன்
பருக்கூத்தை மெய்யில்லை. பார். 95

பாரிடங்கள் சூழப் படர்வனத்தில் நின்றாடும்
நீரிடங்கொள் செஞ்சடில நின்மலனார் - ஏரிடங்கொள்
வாமத்தாள் காண மணிமன்று நின்றாடும்
ஏமத்தார் ஏத்த இயைந்து. 96

---

93. செய்யில் வளை முரலும் - நிலத்தில் சங்கு ஒலிக்கும்; மையில் - குற்றம் இல்லாத; ஏதமின்றி - குற்றம் (இடையூறு) இன்றி.

94. இடத்து - இடக்கரத்தில்; உதீசி - வடதிசை; வடத்துநிழல் - ஆலமரநிழல்; தடம் - குளம்; கயல் - மீன்; மயல் - மயக்கம் (அஞ்ஞானம்)

95. மெய்யன்பருக்கு+ஊத்தை+மெய்+இல்லை; ஊத்தைமெய் - (அழுக்கு) புலால் உடம்பு. தரிசித்தால் முத்தி; பிறப்பில்லை.

96. பாரிடங்கள் - பூதகணங்கள்; ஏர் இடங்கொள் - அழகு இடம் கொண்டுள்ள; வாமத்தாள் - இறைவனின் இடப்பாகம் அமைந்த அம்மை; ஏமத்தார் - திருநீறு அணிந்தவர்கள்; (திருவருள் இன்பத்தில் திளைப்பவர்கள், பக்தர்கள்.)

இயம்பப் புகின்மன்றத்(து) எம்மான் பெருமை
நயம்பப்பச் சொல்லல் நலமே: - கயம்பப்பும்
புல்லோர் பெருமை புகலுங் கனவிடத்தும்
சொல்லோம்சொல் லோமே துணிந்து. 97

துணிந்தமறை ஆகமங்கள் சொல்லப்பொன் வேணி
அணிந்த அரவம் அசையத் - திணிந்தஒளி
மன்றாடும் ஆனந்த வார்மதுவை உண்டுவக்கும்
கன்றாடும் கையுமையாள் கண். 98

கண்மணியே! முக்கண் கரும்பே! இருளகற்றும்
விண்மணியே! என்(று)அன்பர் மேவவே - பெண்மணியாம்
பாகத்தாள் காணப் பரமன் மணிப்புயப்பூண்
ஆகத்தான் செய்யும் நடம். 99

நடலை அறுத்தோம், நமற்(கு) அஞ்சோம், பாசக்
கடலை எளிதில் கடந்தோம், - திட அன்பு
பெற்(று)அம் பலம் அடைந்தோம், பேணுவோம் எம்பெருமான்
சிற்றம் பலம்வணங்குஞ் சீர். 100

திருச்சிற்றம்பலம்

---

97. பப்ப - பரவுமாறு, பப்ப - பயப்ப- பயக்குமாறு, கயம் - கீழ்மை;
பப்பும் - பரப்பும்;

98. உமையாள் கண், (ஆகியவண்டு) மதுவை உண்டு உவக்கும்.
சொல்+அப் பொன்வேணி

99. விண்மணி - சூரியன்; மேவவே - அடையவே. மணிப்புயம் - அழகிய தோள். பூண் ஆகத்தான் - அணிகலன்கள் விளங்கும் மார்பினன். பாகத்தாள் காண, பரமன் நடம் செய்யும்.

100. நடலை - (பிறவித்) துன்பம்; நமற்கு - இயமனுக்கு

திருச்சிற்றம்பலம்

## சிறப்புப் பாயிரம்

பண்பாவந்(து) ஆதிரைநாள் பண்ணவனைப் போற்றிஒரு
வெண்பாஅந் தாதிவிளம்பினான் - விண்பால்நன்
கோடுந்தி யாகரா உத்தமஎன்(று) ஏத்தாரைச்
சாடுந்தி யாகரா சன்.

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வெள்ளியகொக் கிற(கு) அறுகு மதிநதி நீ(று)
அரவாதி மிலைந்து வந்தே
ஒள்ளியபூந் திருக்கைலை வீற்றிருக்கும்
நடராசற்(கு) உவப்புச் செய்வ(து)
உள்ளியா(து) என்(று) அறிஞர் சொலவெண்பா
அந்தாதி ஒன்று பன்னூல்
தெள்ளியசீர்த் தியாகரா சக்கவிஞர்
ஏ(று)இனிது செப்பி னானால்.

திருச்சிற்றம்பல வெண்பா அந்தாதி
முற்றிற்று.

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

# திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி வெண்பா அந்தாதி

## காப்பு.

திங்களணி செஞ்சடைமா தேவன்வெண்பா அந்தாதி
மங்கள மாக வழுத்த. இன்சொல் - இங்(கு)அருளும்
மாதங்க வத்திரத்து மான்முதலோர்க்(கு) ஊறொழிக்கும்
மாதங்க வத்திரத்து மான்.

## சமயாசாரியர்

அடிகளார், காழிவாய் ஞானக் கவுணியர்சூ ளாமணியும்
ஆழிவாய்க் கல்மிதந்த அப்பனும் - ஏழிசைவாய்
பாட்டுரைத்துக் கண்பெற்ற பாவலனுங் கோவை அரன்
ஏட்டெழுதச் சொற்றவனு மே.

## அவையடக்கம்

சீரூருஞ் செல்வத் திருக்கோயில் கொண்டருளி
ஆரூரும் ஒற்றியும் ஆர்பரன்தன் - பேரூர்என்
பாடற்குற் றஞ்சிறிதும் பாரா(து) அருள் புரிவான்
ஆடற் குலகம் நயந்து.

---

காப்பு: மங்களமாக - நலமாக; மா+தங்க+வத்திரம் (வஸ்திரம்) - பெருமை பொருந்திய பொன்னாடை அணிந்த; மான் - மால், திருமால்; ஊறுஒழிக்கும் - துன்பம்நீக்கும், மாதங்க வத்திரத்து மான் - யானை முகப் பெருமான். கோவை - திருக்கோவையார்; அரன் - சிவபெருமான் அவையடக்கம்: தன்பேரூர் - தன்பேர் பொருந்தி வரும், உலகம் நயந்து ஆடற்கு அருள்புரிவான். ஆடல் - பேசுதல்.

## நூல்

திருவார் கமலைத் தியாகேசா! ஒப்பில்
ஒருவா! என்கண்ணோய் ஒழிப்பாய்:- கருவாய்
பிணிக்கு மருந்(து) என்(று) உன்னைப் பேசலன்றி என்கண்
மணிக்கு மருந்(து) என்பேன் மகிழ்ந்து. (1)

மகிழ்ந்(து) ஒற்றி யூர்வாழும் வள்ளால்! முக் கண்ணா!
நெகிழ்ந்(து) உள்ளம்) நின்னை நினைப்பேன் - புகழ்ந்துகவி
பாடுவன்என் கண்மறைவைப் பாற்றினன் என்(று) என்றும் கொண்
டாடுவன்என் ஐயா அருள். (2)

அருளுடையேன் என்(று) என்(று) அறைவை; அறி வில்லா
மருளுடையேன் கண்ணை மறைத்தல் - அருளோ?
திருவாரூர் வாழும் சிவனே! வான்வாழ
மருவாரூர் மாய்த்தாய் வழுத்து. (3)

வழுத்துவேன் ஒற்றிநகர் வாழ்வே! நின் தாள்நெஞ்(சு)
அழுத்துவேன், என்றும் அயரேன், - கொழுத்தபுகழ்
ஐயா! அரனே! அடியேன் குழிவிழுந்து
நையாத வண்ண(ம்) நவில். (4)

---

1. தியாகராசர் தன் கண்ணோயைத் தீர்த்தருள வேண்டும் எனத் தியாகராசப் புலவர் வேண்டுகிறார். ஒருவா = ஒப்பற்றவனே! கருவாய் பிணிக்கு = கருவிலே வாய்க்கும் பிறவிப் பிணிக்கு;

2. பாற்றினன் - நீக்கினன்;

3. அறைவை - சொல்லுவாய்; வான்வாழ = வானகத் தேவர்கள் வாழ; மருவார் ஊர் = எதிரிகளின் முப்புரமாகிய ஊர்களை;

4. அயரேன் = சோர்வுபடேன்; குழிவிழுந்து = கண்ணில் குழிவிழுந்து: (பிறவிக் குழி விழுந்து) நையாத வண்ணம் = மனம் வருந்தாத வண்ணம். வழுத்துவேன் = வாழ்த்துவேன்.

நவில இனிக்கும் பல் நாமத்தாய்! கற்ற
கவிவலவர் ஏத்துகறைக் கண்டா! - புவிஅரசாம்
ஆரூர் அரசே! அமுதே! அடல்ஆழித்
தேரூர் விடங்க!அருள் செய். (5)

செய்ய கழல் அடியேன் சென்னிமிசை வைத்தருள்வாய்.
வெய்யவிடம் உண்ட விமலனே! - கையர்
அடையாத ஒற்றிநகர் ஆண்டவனே! சூலப்
படையார் மலர்க்கரத்(து) அப் பா! (6)

பாவால் உனை அன்பில் பாடேன், பரமேட்டி!
பூவால்உன் பொற்பாதம் பூசியேன், - நோவால்
வருந்தும் எளியேன்உய் வகையுண்டோ? செல்வந்
திருந்தும் கமலையர சே. (7)

சேவேறி வந்(து) அடியேன் செல்லல்களை வாய், மாலும்
பூவேறி னானும் புகழ்புனிதா! - காவேறிக்
கார்தூங்கும் ஒற்றிநகர்க் காபாலீ! கங்காளா!
நீர் தூங்கு செஞ்சடைய னே. (8)

---

5. நவில - சொல்ல; நாமத்தாய் - பெயர்களையுடையவனே! அடல் - வலிமைபொருந்திய; ஆழித்தேர் என்பது திருவாரூர் தேரின் பெயர். தியாகராசர் வீதி விடங்கர் என்னும் பெயருடையவர்.

6. திருவடி தீட்சையை வேண்டுகிறார். சென்னிமிசை - தலை மீது; கையர் - கீழ்மக்கள்; படைஆர் - படைபொருந்திய.

7. பரமேட்டி - பரம்பொருளே! கமலை - திருவாரூர்.

8. சே+ஏறி - இடபம் (காளை) ஏறி; செல்லல் - துன்பம்; பூ ஏறினான் - பிரமன்; கா - சோலை; கார் - மேகம்; தூங்கும் - தங்கியிருக்கும்; காபாலி, கங்காளன் என்பன சிவனின்பெயர்கள்; காபாலி - பிரமகபாலத்தை ஏந்தியவன், கங்காளன் - எலும்பு மாலை அணிந்தவன்.

நேசம் சிறிதும் இலேன்; நின்அடிமை என்(று) உரைப்பேன்;
பாசம் அகன்(று) எப் படிஉய்வேன்?- ஈசா!
கமலா லயத்(து) அமர்வாய்! காரார் களத்து
விமலா! நா யேற்கு விளம்பு. (9)

விள்ளு பெரும்பிறவி வேலைக்(கு) ஒருவடவை.
எள்ளுவினைக் காட்டிற்(கு) இருநவியம். - தெள்ளுபுனல்
பாய்சடையான். ஒற்றியூர்ப் பாண்டரங்கன் வான்அமரர்
ஆய் புகழான் செம்பொன் அடி. (10)

அடி அடைந்தார் துன்பத்(து) அழுந்தல் அழகோ?
கடிஅரவக் கிண்கிணிப் பொற் காலா! - முடியில்மதி
வைத்தாய்! கமலை வரதா! அநாதிமல
முத்தா! உய் மார்க்கம் மொழி. (11)

---

9. நேசம், பாசம் - அன்பு, பக்தி; கமலாலயம்; திருவாரூர்த் திருக்கோவில்; அமர்வாய் - விரும்பி எழுந்தருளியிருப்பவனே; கார் ஆர் களம் - கருமை நிறைந்த கழுத்து; விமலன் - தானும் மலம் இல்லாதவனாய், தன்னை அண்டியவரையும் மலம் இல்லாதவராய் ஆக்குபவன்.

10. தெள்ளுபுனல் - தெளிந்த கங்கை; பாண்டரங்கன் - முப்புரம் எரித்தகாலத்தில் சிவன் ஆடிய கூத்து, பாண்டரங்கம். ஆய்புகழ் - ஆராய்ந்து போற்றும் புகழ்; விள்ளு - பெருகிடும்; பிறவிவேலை - பிறவிக்கடல்; வடவை - பெண்குதிரை முக வடிவோடு கடலுக்குள் தங்கியிருந்து ஊழி முடிவில் மேலே கிளம்பி உலகை அழித்துவிடும் தீ. இறைவன் திருவடி பிறவிக் கடலை வற்றச் செய்யும்; இரு நவியம் - பெரிய கோடரி, மழுப்படை; திருவடி வினைக்காட்டை அழிக்கும் கோடரி.

11. கடிஅரவம் - மிகுந்தஒலி; கிண்கிணி காற்சதங்கை; அநாதி மலம், ஆணவம், கன்மம், மாயை என்ற மலங்கள், மல முத்தன் - மலத்தினின்று நம்மை விடுபெறச் செய்பவன்; மார்க்கம் - வழி; மொழி - சொல்லியருள்க.

மொழியத் தெவிட்டா முதல்வா! நா யேன் துன்(பு)
ஒழியக் கருணை உதவாய்; - கழியப்
புகழ்வேன் உனை, ஒற்றிப் புண்ணியா! இன்றேல்
இகழ்வேன் இரந்(து) உண்டாய் என்று. 12

என்று(ம்) மதிக் கண்ணா! எழில்கமலை ஈசா! மான்
கன்று சுமந்த கரதலத்தாய்! - என்(று) உனையே
பேசப் பெறுவேனேல், பெற்றேன் பிறவிமுதல்
வீசப் பெருவாள் விரைந்து. 13

விரையார் மலர்இதழி வேய்ந்த விமலா!
நரையார் விடையேறு நம்பா!- வரையார்
அரவணிந்த ஒற்றியூர் அண்ணலே! நெஞ்சில்
கரவணிந்த நாயேனைக் கா. 14

காமன் உடல் பொடித்தாய்! காலன் படஉதைத்தாய்!
பூமன் சிரங்கொய்தாய்! பூங்கொன்றைத் - தாமனே!
சூல(ம்)மழு ஏன் சுமந்தாய்? கனல்கண்சேர்
பால! கமலைப் பரா. 15

---

12. கழிய - மிகவும்; துன்பு - துன்பம்; இரந்து உண்டாய் - பிச்சையெடுத்து உண்டாய்;

13. பிறவிமுதல் - பிறவியின் வேர்; வீச - அறுத்தெறிய; பெருவாள் விரைந்து பெற்றேன்.

14. விரையார் - மணம் மிகுந்த; இதழி - கொன்றை; நரையார் - வெண்மை நிறைந்த; வரைஆர் - மலையில் நிறைந்த; கரவு - வஞ்சனை;

15. பூமன் - பிரமன்; தாமனே - மாலையனே! பால - நெற்றியனே. பரா - பராபரனே! (பரம்பொருளே)

பரன் என்றும் ஒற்றியூர்ப் பண்ணவன் என்றும் சங்
கரன் என்றும் காளகண்டன் என்றும் - வரன் என்றும்
கூறும் அடியவரைக் கூற்றன்கும் பிட(டு) அகல்வான்
ஏறும் பகடோ(டு) இரந்து. 16

இரப்பார் பசியால், இனைவார், எனையார்
புரப்பார் எனவே புகல்வார்;- சிரப்பாற்
சிரம்ஏந்து தென்கமலைத் தேவே சனைமுன்
வரம்ஏந்த வாழ்த்தாத வர். 17

வரைமகள்வா மத்தான், மணித்திரளை வாரித்
திரைஎறியும் ஒற்றியூர்ச் செல்வன், - பிரசமலர்க்
காமன் பொடித்த கனல் விழியான், பூங்கொன்றைத்
தாமன், பொற்றாளே சரண். 18

சரணம் சரணம் என்று சார்ந்தால் ஆ ரூரான்,
அரணம் பொடித்தநகை அப்பன், - முரணார்
உழுவை அதள் உடையான், ஓங்(கு) அருளான், நெஞ்சே!
நழுவவிடு வானோ நமை? 19

---

16. காளம் - கருமை; வரன் - வரந்தருபவன்; கூற்றன் - எமன்; ஏறும்பகடு - ஏறிவரும் எருமைமாடு; எமன் இரந்து அகல்வான்.

17. இனைவார் - வருத்தம் அடைவார். புரப்பார் - பாதுகாப்பார், வாழ்த்தாதவர் பசியால் இரப்பார், இனைவார். சிரப்பால் - சிரத்தின் (தலையின்) பக்கத்தில்; சிரம்ஏந்து - தலை மாலை ஏந்திய.

18. வரைமகள் வாமத்தான் - மலைமகளை இடப்பாகம் கொண்டவன், மணித்திரளை - நவ மணிகளாம் தொகுப்பை; பிரச மலர் - தேன் சிந்து மலர்; சரண் - அடைக்கலம்.

19. அரணம் - முப்புரம் மதில்கள்; முரண்ஆர் - பகைமை நிறைந்த; உழுவை - புலி; அதள் - தோல்; நழுவ விடான் - கைவிட மாட்டான்.

நமராங்காள்! ஒற்றியூர் நம்பனையே சேர்மின்,
பமரஞ் செறிபூப் பறிமின், - நிமிர்அவன்தாள்
சூட்டுமின், அன் னோன் புகழே சொல்லுமின், துன்பொழிய
ஓட்டுமின் பேரின்பம் உற்று. (20)

உற்றார் உனையன்றி உண்டோ? அடியேற்குப்
பெற்றாரு(ம்) நீயே, பெருமானே! - கற்றார்கள்
பாப்பாடும் ஆரூர்ப் பரமேசா! நோய்ஒழித்துக்
காப்பார்கள் யாரோ கரை? (21)

கறைக்கண்டா! நின்னை ஒரு காலும் மறவேன்;
பிறைக்கண்டம் சூடும் பிரானே! - சிறைக்கலுழன்
ஊர்ந்தான் தொழும்ஒற்றி யூரா! அருள், உன்னைச்
சேர்ந்தார் தெளியும் வகை தேர்ந்து. (22)

தேரார் நெடுவீதிச் செல்வத் திருவாரூர்
நீரார் சடில நிமலனே! - காராருங்
கண்ட! நின் அன்பர்களைக் காலன் கரத்(து) ஏந்து
தண்டம் செயல் என்னோ? சாற்று. (23)

---

1. நமராங்காள் - நம் உறவாம் அடியவர்களே! பமரம் = வண்டு; பூவை அவன் திருவடிகட்குச் சூட்டுங்கள்;

21. உற்றார் = உறவினர்; பெற்றார் = தாய் தந்தை; கரை = சொல்லியருள்க; எனைக் காப்பவன் நீயே; வேறு ஒருவருமில்லை.

22. ஒருகாலும் - ஒருமுறையும்; சிறைக்கலுழன் = சிறகுகளையுடைய கருடன்; ஊர்ந்தான் = திருமால்; உன்னைச் சேர்ந்த அடியார்கள் மனத் தெளிவும் ஞானமும் பெறும் வகையை ஆராய்ந்து அருள்செய்க.

23. சடிலம் = சடை; நிமலன் = மலம் அற்றவன்; சிவனடியார்களை இயமன் தன்கை ஆயுதத்தால் வருத்தலாமோ? சொல்க!

சாற்றுதிரு நீறணிந்து, தண்கண் மணிபூண்டு,
போற்றுதிரு நாமம் புகன்றேத்தி, - ஏற்று
வருவார் தென் ஒற்றியூர் வாழ்வார்க்(கு)ஆ ளானார்
மருவார் கருவினிடை வந்து. (24)

வந்திக்கச் சென்னியுண்டு, வாழ்த்திடநன் நாவுண்டு,
சிந்திக்க நீயுண்டு, செஞ்சடைமேல் - அந்திப்
பிறையணிந்த தென்கமலைப் பெம்மான் தாள் உண்டு,
குறையுண்டோ? நன்நெஞ்சே கூறு. (25)

கூறுதமிழ் ஒற்றியூர்க் கோமானுக்(கு) என்செய்தோம்?
ஏறு விடைமேல் எழுந்தருளி - நாறுகுழல்
அம்மையொடு காட்சி அளித்தருளி, நன்நெஞ்சே!
நம்மைப் புரந்தருள, நாம். (26)

நாமா தவம்உடையோம்? நன்நெஞ்சே! தென்கமலைக்
கோமான் எதிர்நின்று கும்பிடோம், - பூமாலை
சூடோம், இனிய கவி சொல்லித் துதியோம், கூத்து
ஆடோம் சிறிதும்இத னால். (27)

---

24. சாற்று - திருமுறைகள் பெருமையாகச் சாற்றுகின்ற; தண் கண்மணி - குளிர்ந்த உருத்திராக்க மணிமாலை; ஏற்று - இடபத்தின்மீது மருவார் - பொருந்தார்; மீண்டும் பிறப்பில்லை.

25. வந்திக்க - வணங்க; சென்னி - தலை; நீ - இங்கு நெஞ்சம்;

26. நாறுகுழல் - மணம் வீசும் கூந்தல்; புரந்தருள - காப்பாற்றி அருள் செய்திட; நாம் ஒற்றியூர்க் கோமானுக்கு என் செய்தோம்?

27. இறைவன் முன் செய்ய வேண்டிய எதையும் செய்யாத நாமா தவம் உடையோம்?

ஆலம் மிடற்றில் அணிந்து, மலர் மாதர்க்கு
நீலம், செவியில் நிறுத்தினாய்;- கோல
மருப்பணிந்த ஒற்றியூர் வள்ளால்! உனது
திருப்புகழுக்(கு) ஈறுண்டோ? செப்பு. 28

செம்பும் கமலைத் தியாகேசா! என்று(ம்) நீ
ஒப்பும் உயர்வும் ஒருவினாய்;- அப்பனே!
உன்னைவிட என்நோய் ஒழித்தருள்வார் யார்?சேயை
அன்னைவிடல் அன்றே அழகு. 29

அழுதபிள்ளை பால்அருந்தும் என்பார், அழுதும்
இழுதையேன் மாட்(டு) இரக்கம் இன்றோ?- தொழுதழுகையை
வெட்டுவார் இல்லை, ஒற்றி மேவுபர மா! இதழிக்
கட்டு.வார் வேணிஅழ கா! 30

காவேந்து பொன்நகரங் கைவிட்டுத் தென்ஆரூர்ப்
பூவேந்து பூங்கோயில் புக்கமர்ந்தாய்;- சேஏந்து
அப்பனே! என்நோய் அகற்றில் பழியுண்டோ?
துப்பைநேர் வேணியாய், சொல். 31

---

28. மலர்மாதர் - திருமகள்; நீலம் செவியில் நிறுத்தல் - இங்கு மாங்கல்யத்தைக் காத்தலைக் குறித்தது; ஆலம் - ஆலகால நஞ்சு; ஈறு - முடிவு;

29. ஒருவினாய் - நீங்கினாய்; சேய் - குழந்தை; அழகு அன்றே - அழகு அல்லவே.

30. இழுதையேன் - அறிவில்லாத யான்; (பேயேன்) இன்றோ? - இல்லையோ?; இதழிக் கட்டு - கொன்றைப் பூ கட்டிய; வார் வேணி - நீண்ட சடையுடைய;

31. கா - கற்பகச் சோலை, பூவேந்து - அழகு பொருந்திய (பூமி தாங்கியுள்ள) விண் நகரம் விட்டு மண் நகரம் வந்தாய்; சே - இடபம் (காளை); துப்பை நேர் - பவளத்தை ஒத்த;

சொல்வேன்கேள் நோயே, நின் தூவாயில் மண்ணிட்டு
வெல்வேன், எனைநீ விடுத்தகல்வாய்;- அல்வாய்
களத்தன், ஒற்றி யூர்ஆளி, காமன்காய்ந் தான்,என்
உளத்தன், அருள்வலிகொண்(டு) ஓர்ந்து. 32

ஓராரும் நின்புகழை, ஓர்ந்(து) உன்தாள் தஞ்சமெனச்
சேராரும், இன்கவிகள் செப்பாரும்,- சீரே
திருந்தும் கமலைத் தியாகேசா! மண்ணில்
இருந்(து) என்? இறந்(து) என்? இயம்பு. 33

இயங்கலிக்கும் ஒற்றியூர் எந்தாய்! நின் அன்பர்
நயங்கலிக்கும் பாடல் நவிலேன்; பயங்கலிக்கும்
நெஞ்சேன், கொடுநோயை நீக்கி, அடியேன் முன் நின்(று)
அஞ்சேல் என்; நீயே அரண். 34

அரணம் பொடித்த அழகா! நா யேற்கு
மரணம் பிறப்(பு) இரண்டும் மாற்றிச் - சரணந்
தருவாயேல் ஆரூர்த்தி யாகேசன் என்பேர்
ஒருவாது நிற்கே உறும். 35

---

32. ஆளி - ஆள்பவன். அல்வாய் களத்தன் - இருள் அமைந்த கழுத்தினன். ஓர்ந்து - ஆராய்ந்து (தெளிந்து) திருவருள் துணைகொண்டு நோயை வெல்வேன்; வாயில் மண்ணைக் கௌவல், தோல்வி பெறுதலாம்.

33. நின் புகழை ஆராய்ந்து, நின் திருவடிக்கு அடைக்கலமாகி, நின் புகழ்ப் பாடல் சொல்லாதவர்கள் மண்ணில் இருந்தால்தான் என்ன? இறந்தால்தான் என்ன?

34. இயம் கலிக்கும் - இசைக் கருவிகள் ஒலிக்கும்; நயம் கலிக்கும் - நயம் நிறைந்திருக்கும்; பயம் கலிக்கும் - பயம் மிகுந்திடும்; அஞ்சேல் என் - அஞ்சாதே என்பாயாக. நீயே அரண் - நீயே பாதுகாப்பான புகலிடம்.

35. அரணம் - முப்புரம்; சரணம் - அடைக்கலம்; தியாகராசன் என்ற பெயருடைய தன்னைக் காத்தால்தான், தியாகராசன் என்ற பெயர் இறைவனுக்குப் பொருந்தும். உறும் - பொருந்தும், தகும்.

உற்ற நிராமயன் என்(று) ஓதற்(கு) ஏற் பச்சிறியேன்
பெற்ற பிணிவருத்தம் பேசினால் - முற்றுணர்ந்து
நீ அறியாய் ஒற்றியூர் நின்மலா! நீ அறியின்
நோயறியேன் அன்றோ நுவல். 36

நுவல் அடியார் துன்(பு)ஒழியா நோன்பும் உனக்(கு) உண்டோ?
கவல் அடியேன் துன்பங் களையாய்;- சுவலின் இடைக்
கங்காளா! தென்கமலைக் காமாரி! வெற்புயிர்த்தாள்
பங்காளா! என்னோ? பகர். 37

பகலவன் கண்ணைப் பறித்தாய் மகத்தில்;
இகல் இலேன் கண்மறைத்தாய் என்னோ?- பகையும்
உறவும் இலேன் என்ப(து) உணர்த்தவோ? ஒற்றி
அறவிடையாய் நாயேற்(கு) அறை. 38

அறையும் மறையும் அரியும் அயனும்
நிறையும் சுரரும்எதிர் நின்று - பறையும்
துதியோ நின் பூஞ்செவிக்குத் தொல்வளஞ்சேர் ஆரூர்ப்
பதியே! நா யேன்புகலும் பாட்டு. 39

---

36. நிராமயன் – கடவுள், நோயற்றவன்;
37. கவல் – வருந்தும்; சுவல் – தோள்; கங்காளா – எலும்பு மாலை அணிந்தவனே! காமாரி – காமனை அழித்தவனே! வெற்புயிர்த்தாள் – மலை(யரசன்) பெற்றெடுத்தவளாகிய உமையம்மை.
38. மகம் – வேள்வி; தட்சயாகத்தில் கலந்துகொண்ட சூரியன் ஒருவன் கண்ணைப் பறித்தாய். அவன் நின் பகைவனோடு சேர்ந்ததால் நீ செய்தது சரி. நின்னிடம் எவ்வித (இகல்) மாறுபாடும் இலாத என் கண்ணை எதற்காகப் பறித்தாய்? நீ பகையும் உறவும் இலாதவன் - விருப்பு வெறுப்பு இல்லாதவன் – வேண்டுதல் வேண்டாமை இலாதவன் என்பதை உணர்த்தற்கு அவ்வாறு செய்தாயோ? அறவிடையாய் – தர்ம தேவதையைக் காளையாக உடையவனே.
39. பறையும் – சொல்லும்; அறையும் மறை – ஒலிக்கும் வேதங்கள்; அரி – திருமால்; அயன் – பிரமன்; சுரர் – தேவர்கள்; நாயேன் புகலும் பாட்டு அவர்கள் சொல்லும் துதியோ?

பாடும் பணியொடும்நின் பாதப் பணிஅடியேன்
கூடும் பொருட்(டு)அடிமை கொண்டருள்வாய். - சூடும்
பிறையோய்! திருஒற்றிப் பெம்மானே! யார்க்கும்
இறையோய்! இரங்குற்(று) இனிது. 40

இனிய பசுந்தேனும் இன்னமுதும் பாலும்
கனிரசமும் பாகுங் கலந்து - நனிநின்
செவிக்(கு) அருத்த நாவலூர்ச் செம்மலோ, ஆரூர்ப்
புவிக்கரசே, நாயேன்? புகல். 41

புகல் எனக்கு நீ அன்றிப் புண்ணியா உண்டே?
நகவெடுத்து நம்பா நவில்வாய். - ககனந்
தடவுபொழில் ஒற்றியூர்ச் சங்கரா! நாயேன்
இடர் ஒழித்துக் காப்பாய் இனி. 42

இனியடியேன் என்செய்வேன்? யாரை இரப்பேன்?
பனி மதியஞ் சூடும் பரமா!- நுனியகதிர்
வேலோனைப் பெற்ற விமலா! ஆரூர் உமையாள்
பாலோய் என(து) இடுக்கண் பார். 43

---

40. பணி - தொண்டு; இனிதே இரக்கம் கொண்டு அடிமை கொண்டருள்வாய். (திருவடித்தொண்டு செய்தல் பொருட்டு)

41. அருத்த - ஊட்ட; நாவலூர்ச் செம்மல் - சுந்தரர்; சுந்தரரின் கண்ணைக் கொண்டபோது அவர் இனிய தமிழால் பாடி மீண்டும் கண்ணைப் பெற்றார். அவ்வாறு இனிய தமிழ் பாட அடியேன் சுந்தரரோ? சொல்க.

42. ககனம் - வானம்; வானத்தைத் தடவும் சோலை; புகல் - புகலிடம்; அடைக்கலம். நக - மகிழும் படியாக;

43. நுனிய கதிர் - முனைக் கூர்மையும் ஒளியும் உடைய. வேலோன் - முருகன்; பாலோய் - பங்கில் உடையவனே? இடுக்கண் - துன்பம்; பனி மதியம் - குளிர்ந்த நிலவு.

பாரளந்த மாயவனும் பங்கயத்து மேயவனும்
நீரளந்த செய்யசடை நின்மலா! - காரளந்த
கண்டா! என்(று) ஏத்தும் கபாலி! ஒற்றி யூர! அருள்
பண்டார மே! கண்ணோய் பாற்று. 44

பாவலரும் காவலரும் பண்ணவரும் மண்ணவரும்
பூஅலர் கொண்(டு) அர்ச்சித்துப் போற்றியே - நாவலரும்
சீர்உரைக்கும் தென்கமலைத் தெய்வமே! உண்டோநின்
பேர் உரைக்கத் தீராப் பிணி. 45

பிணிஎன் செயு(ம்)? நெஞ்சே! பேதுறேல், ஒற்றி
மணிகண்டன் பாத மலரைக் - கணிகொண்டு
பூசித்து நின்று, புனைந்(து) ஏத்தி, எஞ்ஞான்றும்
நேசித்(து)ஓ வாமல் நினை. 46

நினைவாய்எஞ் ஞான்றும், எதிர் நின்றுகவி மாலை
புனைவாய், என்(று) ஆரூர்ப் புனிதன் - எனையடிமை
கொண்டான்; இனிஎன் குறை? நெஞ்சமே, அனையன்
வண்டார் மலர்க்கழலை வாழ்த்து. 47

---

44. பாரளந்த மாயவன் - உலகளந்த பெருமாள் (திருமால்); பங்கயத்து மேயவன் - தாமரையில் உறையும் பிரமன். அருள் பண்டாரம் - அருள் களஞ்சியம். (கருவூலம்)

45. காவலர் - அரசர்கள்; பண்ணவர் - தேவர்கள்; மண்ணவர் - மண் உலக மக்கள்; பூ அலர் - ஒருபொருட் பன்மொழி. பூவாகிய அலர். நா அலரும் - நாவில் மலர்கின்ற (தோன்றுகின்ற.)

46. கணி - சண்பகப் பூ; ஓவாமல் - இடையறாமல்; எஞ்ஞான்றும் - எப்பொழுதும்; பேதுறேல் - வருந்தாதே. (மயங்காதே)

47. அனையன் - அத்தகையவன்; வண்டார் மலர்; வண்டுகள் மொய்க்கும் மலர். மலர்க்கழல் - மலர் போன்ற திருவடிகள்;

வாழ்த்துவது(ம்) நின் புகழை; மன்னு(ம்) நின்தா ளிற்சென்னி
தாழ்த்துவதும், நின்னைமனம் சார்த்துவதும்:- சூழ்த்தபொழில்
செற்ற ஒற்றி யூர்வாழும் செல்வத் தியாகேசா!
முற்றவம் இலார்க்(கு)எளிதா மோ? 48

மோதகக்கை யான்பெற்ற முன்னவா! நாயேன்செய்
பாதக(ம்) முற்றும்அழல் பஞ்(சு)அன்றோ? - கோதகல்நின்
அன்பர்களை ஆரூர்த்தே வாசிரியன் காவணத்துத்
துன்(பு) அகலக் கண்டு தொழின். 49

தொழுவார், எழுவார், துதிப்பார், மதிப்பார்,
அழுவார், கூத் தாடுவார் ஆகி,- வழுவாநின்
தொண்டர்அடித் தொண்டுசெயும் தூப்பே(று) எனக்(கு) ஒற்றி
அண்டர்பிரா னே!அருள்செய் யாய். 50

ஆயாச் சிறியேனும் ஆய்ந்தபெரி யோர்உறும்பே(று)
ஏயா மகிழநினை எய்தினேன் - தூயா!
மதியும் அரவும் முடி வைத்தாய்!ஆ ரூர்வாய்
நிதியே! அதனை நினைத்து. 51

---

48. செற்ற - நெருங்கிய; முற்றவம் - முன் + தவம்; முன்தவம் இருந்தால்தான் இறைவனை வணங்க முடியும்.

49. மோதகம் - கொழுக்கட்டை; மோதகக் கையான் - விநாயகர்; அவரைப் பெற்றவர் சிவன்; காவணம் - மண்டபம்; திருவாரூர் தேவாசிரியன் மண்டபத்தில் அடியார்கள் நிறைந்திருப்பர். அவர்களைத் தொழுதால், நாம் செய்துள்ள பாதகம் முழுமையும் தீயில் பட்ட பஞ்சாகும்.

50. தூப்பேறு - தூயபேறு; அடியார்க்குத் தொண்டு செய்வதே தூயபேறு. அதனை வேண்டி நின்றார். முன்னே அடியாரின் மெய்ப் பாடுகள் பேசப் பெற்றன.

51. ஆயாச் சிறியேன் - இறைவன் பற்றியும் இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு பற்றியும் ஆராயாத சிறியேன்; ஏயாமகிழ - ஏய்ந்து மகிழ - அடைந்து மகிழ; பேறு அதனை நினைத்து.

நின்னைத் துதித்திடுவேன், நின்வாமத்(து) ஏய்ந்தமலைப்
பொன்னைத் துதித்துப் புகழுவேன்,- உன்னருமை
மக்களையும் நன்கு வழுத்துவேன்; ஆள்; ஒற்றி
அக்(கு)அரவம் பூண்டருள்ஐ யா. 52

ஆவா அடியேன் அலந்தேன்; அணி ஆரூர்த்
தேவா! தியாகச் செழுஞ்சுடரே!- நோவாலே
எத்தனை நாள் அல்லல்பட்(டு) ஏங்குவேன்? எம்பெருமான்!
சித்தம்இரங் காய்,என் செயல்? 53

செயல் ஒன்றும் இன்று; திருஒற்றி யூர்வாழ்
புயல்ஒன்று வேணிப் புனிதா!- பயல்ஒன்று
வெற்பரசி யோடு மிளிர்காட்சி தந்தருள்; தொங்
கற்பனையான் பாநாய கா. 54

காட்டுங் கதிரவன்நீ, காணுங்கண் நாயேன்என்
மாட்டு விளங்(கு) ஒளிநீ, மாற்றினால் - காட்டுதிறம்
எங்கு விளக்குவாய்? ஈசா!தென் ஆரூரில்
தங்கும் உலகநா தா. 55

---

52. மலைப்பொன் - மலைமகள்; மக்கள் - விநாயகர், முருகர்; ஐயா! ஆள் - ஆண்டருள்க. அக்கு - அக்கமணி; அரவம் - பாம்பு;
53. ஆவா - ஆ!ஆ! இரக்கக் குறிப்பு; அலந்தேன் - துன்பமுற்றேன். சித்தம் - மனம். என்செயல் - என் செய்வேன்.
54. தொங்கல் பனை - பனம் பூ மாலை; சேரருக்குரியது. சேரமான் பெருமாள் நாயனார் திரு ஆரூர்ப் பெருமானை மும்மணிக் கோவை பாடித் துதித்துள்ளார். புயல் ஒன்று - மேகத்தை ஒத்த; வேணி - சடை; பயல் ஒன்று வெற்பரசி - பாதியுடம்பில் பொருந்திய மலைமகள். மிளிர் - விளங்கிடும்; அம்மையப்பராக நின்னை வணங்குவதினும் வேறு செயல் ஒன்றும் இல்லை.
55. காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே - சிவஞான போதம்.
என் மாட்டு - என்னிடத்தில்; கண்ணுக்கு ஒளியாக விளங்கும் நீ என்னிடத்தில் அதை மாற்றினால் - ஒளியாக இல்லை என்றால் - காட்டும் திறத்தை எங்கு விளக்குவாய்?

தாதாநீ யே. நின்பால் சார்ந்(து) இரப்போன் யான்உவந்து
நீதாஎன் றேன் என்னை நீக்கினால் - ஓது கொடை
மற்(று) எங்குக் காட்டுவாய்? மா தேவா! ஒற்றியூர்
உற்றபர மா! புகல்ஏ தோ? 56

ஓ என்(று) அலறி, ஒளி, அடியேன் கண்ணிற்குத்
தா என்றேன். நீதிரத்தல் தான்நன்றோ?- ஏவினான்
என்று சினந்(து) ஒன்றுரையாய்: ஏர்ப்பரவை யார்மனைக்(கு)
ஏன்
சென்றாய்? கமலைஅமு தே. 57

தேவர்பர(வு) ஒற்றியூர்ச் செல்வா!நின் செஞ்செவிக்கண்
மூவர்தமி ழோ(டு)யான் மொழிபுன்சொல் - பாவும்
புகுமே?யாழ் ஓசையொடு புன்மான் ஒலியும்
நகுமே அதனுள் நயந்து. 58

நயந்துகேள், நாயேன் நவில்ஒருவிண் ணப்பம்,
பயந்தவிர நின்பேர் பரித்தேன்,- வயங்(கு)ஆரூர்
எந்தாய்,யான் கண்இழந்தேன் என்றால் யாவர்க்குந்
தந்தாய்,நீ கண்இழந்தாய் தான். 59

---

56. தாதா - வள்ளல்; நீ தா என்றேன்; புகல் ஏதோ - புகலிடம் ஏது; நீயே புகலிடம்; நின்னையன்றிப் புகலிடம் இல்லை.

57. திரத்தல் - மறுத்தல்; ஏவினான் - செல்லுமாறு கட்டளையிட்டான்; சுந்தரர் ஏவினார் என்று பரவையார் இல்லத்திற்குத் தூது சென்றாயே. நான் ஏவினால் எனக்குக் கண் ஒளி தரல் ஆகாதோ? ஏர்ப்பரவை - அழகிய பரவை நாச்சியார்.

58. நகுமே - மகிழுமே. அதனுள் - செவியினுள்; நயந்து - விரும்பி;

59. பரித்தேன் - தரித்தேன்; மனத்தில் மறவாது வைத்தேன்; வயங்கு - விளங்கும்; யாவர்க்கும் தந்தையே; நீ அருட்கண் இழந்து விட்டாய் போலும்.

தானக் களிற்றின் தலைமேல் உலாப்போதும்
வானத்(து) இறை.பிரமன், மால்வாழ்வும் - ஏனத்தின்
கோடணிந்த ஒற்றியூர்க் கோமான்நீன் தொண்டு செயும்
பாடணிந்த வாழ்விற்(கு)ஒப் பா? 60

பாடக்கண் பாவலர்க்குப் பண்டுதந்தாய், இன்(று) உன்னை
நாடக்கண் நாயேற்கு நன்குதவின் - ஈடுன்
புகழ்புதிதாம், ஆரூர்ப் புனிதா! அஃதன்றி
இகழ்பவரோ யாரும் இலர். 61

இல்லை எனஇரந்தார்க்(கு) ஈயாமை புண்ணியமோ?
கொல்லைவிடை யூருங் குழகனே!- நல்லை
என உரைப்பார், நிற்(கு) இன்றோ? ஈசனே! ஒற்றிப்
பனவனே! ஈத்துவக்கும் பண்பு. 62

பண்புடைஎந் தாய்! நாவல் பாவலற்குத் தோழமைகொள்
நண்புடையான் என்றுவிழி நல்கினாய் - நண்புடையேன்
அல்லேன் எனினும் அடிமையான் ஆரூர்வாழ்
நல்லாய் எனக்கும்விழி நல்கு. 63

---

60. தானக்களிறு - மதம் பொருந்திய யானை (ஐராவதம்); வானத்து இறை - இந்திரன்; ஏனத்தின் கோடு - பன்றக் கொம்பு; பாடு - பெருமை;

61. நாட - விரும்பிக் கண்டு மகிழ. ஈடு + உன்; ஈடுன் புகழ் - தகுதி வாய்ந்த நின்புகழ்;

62. கொல்லை விடை - முல்லை நிலத்து காளை; முல்லை நிலக் கடவுள்; திருமால் காளையாக இருந்தார். குழகன் - அழகன், இளைஞன்; நல்லை - நல்லவன்; பனவன் - பார்ப்பான்; இங்கு இறைவனைக் குறித்தது; நிற்கு - நினக்கு; இன்றோ - இல்லையோ?

63. நாவல் பாவலன் - சுந்தரர்; சுந்தரர் நின்தோழர் என்பதனால் கண் ஒளி நல்கினாய் போலும். நண்பன் அல்லன் எனினும் நின் அடியேன் எனவே எனக்கும் கண் ஒளி நல்குக.

நல்குர(வு) எஞ்ஞான்றும் நணுகாது; நால்வர்க்குச்
சொல்குரவு பூண்ட சுடர்மதியான், - பல்குரவு
பாவைதரும் ஒற்றிப் பரமன் புகழ்பாடும்
நாவையுடை யார்பால் நயந்து. 64

நயனங் களிக்க நடனஞ்செய் நாதா!
பயன்அங்கை வைத்த பரமா! - வியன் நஞ்சம்
உண்டஆரூரா! உறுநோய் ஒழித்(து) என்னைக்
கண்டுகொளல் நிற்கே கடன். 65

கடல் நஞ்(சு) அமுதாக்கக் கற்றாய்! தமியேன்
உடல்நஞ் சனநோய் ஒழிக்க - விடையோனே!
கல்லாய் எனில்,என் கரைவாய்?தென் ஒற்றிவாழ்
மல்லாய்,எல் லாம்வல்ல வா. 66

வாயே உனக்(கு) இதன்மேல் வாழ்(வு)என்? தென் ஆரூர்வாழ்
தாயே! அனைத்துயிர்க்கும் தந்தையே! நாயேனைக்
காப்பாய்; கருணைக் கடலே!என்(று) இன்தமிழால்
பாப்பாடில் போமே படர். 67

---

64. நல்குரவு - வறுமை; நால்வர் - சனகாதி முனிவர்கள்; சொல் + குரவு - சொல்லத் தகும் ஞானாசிரியன் நிலை; பல்குரவு - பல்கு + உரவு. வலிமை மிகுந்த; பாவை - பாக்களை;

65. நயனம் - கண்; பயன் அங்கை வைத்த - அஞ்சேல் என அபய கரத்தாலும், என் திருவடியைப் பற்றிக் கொள் என வரத கரத்தாலும் பயன் தரும் அழகிய கைகளைக் கொண்ட; வியன் - நச்சுத்தன்மையில் சிறப்புடைய

66. மல்லாய் - வளமானவனே! கரைவாய் - சொல்லுவாய்; நஞ்சுஅன நோய் - நஞ்சு போன்ற நோய்; கடல் நஞ்சை அமுதாக்கக் கற்ற நீ, என் உடல் நஞ்சை (நோயை) நீக்கக் கற்க வில்லையே.

67. படர் - துன்பம்; இன்தமிழால் பாடின் துன்பம் போம்.

படஅரவத் தோடுபுலிப் பாதனுங்கண்(டு) ஏத்த
நடஅரவங் காட்டுகழல் நம்பன்:- தடமதில்சூழ்
ஒற்றியூர் மேவும் ஒருவன். பணிந்(து) ஏத்தும்
பற்றுளார்க்(கு) உண்டோ பயம்? 68

பயன்மதியம் சென்னி பரித்தாய்,வெற்(பு) ஈன்ற
கயல்விழிஓர் பாகங் கலந்தாய் - வியன் ஆரூர்க்
கம்பிக்கா தா! கருணைக் கட்டியே! நாயேனை
நம்பிக்கா தாநன் நலம். 69

நலம்ஒன்(று) உனக்(கு)உரைப்பேன்: நன் நெஞ்சே! கேட்டி.
பிலம் ஒன்(று) அரவணிந்த பெம்மான்.- கலம் ஒன்று
வாரிசூழ் ஒற்றியூர் வாழ்வான். பெருங்கருணை
நாரிபா கன்கழலே நம்பு. 70

நம்பினேன் உன்னை நழுவவிடேல்: வெந்நோயால்
வெம்பினேன் வீதி விடங்கனே! - தும்பிக்
கரத்தோனோ, யானும் ஒரு கால்முளை.மண் ணுண்ட
சரத்தோய், அருள், கமலே சா. 71

---

68. படஅரவம் - பதஞ்சலிமுனிவர். புலிப்பாதன் - வியாக்கிர பாதர்; ஒற்றியூரனை வணங்குவார்க்குப் (மரண) பயம் இல்லை.

69. பயன்மதியம் - பாதி நிலவு; பரித்தாய் - தாங்கினாய். வெற்பு ஈன்ற கயல்விழி - பார்வதி; கம்பி - காதணி வகை. அதை அணிந்த காதா; காதா - காதினனே. நம்பி கா - நம்பிக்கையுடன் காத்தருள்க; நல் நலம் தா; தா - தந்தருள்க.

70. கேட்டி - கேட்பாயாக. பிலம் ஒன்று - வளையில் உள்ள; கலம் ஒன்று வாரி - கப்பல்கள் சேர்ந்திருக்கும் கடல்; நாரி - பெண்;

71. தும்பிக் கரத்தன் - யானை முகப் பெருமான்; கால் முளை - சந்ததி (மகன்); மண் உண்ட சரத்தோய் - திருமாலை அம்பாக (முப்புரம் எரித்தபோது) கொண்ட சிவபெருமானே. வெந்நோய் - கொடிய நோய்.

சார்ந்தோர்ப் புரக்கும் தயாநிதிநீ யே என முற்(று)
ஓர்ந்தோர் சொலல்கேட்(டு) உனையடைந்தேன், வார்ந்தமலைச்
சாபா! தென் ஒற்றிநா தா! கா: முன் கூடலிலே
மாபாவி யைப்புரந்த வா. 72

வாழ்(வு) உனக்(கு)ஈ சன்புகழை வாழ்த்தலே, வன்நெஞ்சே!
தாழ்(வு) உனக்(கு)அன் னோன்புகழைச் சாற்றாமை;-
ஏழ்புவியும்
போற்றும் கமலைப் புராணனைவாய் வந்தபடி
சாற்(று)உறுதி ஈ(து)உனக்குத் தான். 73

தானே தனக்குச் சரியாம்நின் தாள்மலர்க்(கு)
யானே சரணம் அடைந்(து)அடிமை - யானேன்,
இனிஎன் செயினும் செய்; எம்பெருமான், இன்பங்
கனிஒற்றி யூர்ச்சங் கரா. 74

கராவாய் மதலைவரக் கண்டாய், தென் ஆரூர்ப்
பிரானே! ஆற் றிட்டசெழும் பீதம் - பராவக்
குளத்துவரச் செய்தாய், கொடியேன்கண் தந்தால்
வளத்(து)அவையோ(டு) ஒன்றாம்அம் மா. 75

---

72. வார்ந்த மலைச் சாபா - முப்புரம் எரிக்க எழுந்தருளியபோது, உயர்ந்த மேருமலையை வில்லாகக் கொண்டவனே! (சாபம் - வில்) கூடல் - மதுரை; பெரும்பாவியையும் மன்னித்து அருள் செய்தான் என்பது திருவிளையாடல் புராணச் செய்தி. முற்று ஓர்ந்தோர் - முழுமையும் உணர்ந்தோர். புரக்கும் - காக்கும்; கா - காப்பாயாக.
73. புராணன் - பழமையானவன்; சாற்று - புகழ்ந்து சொல்லுக;
74. தானே தனக்குச் சரியாம் நின்தாள் - தனக்குத் தானே ஒப்பாம் நின் திருவடி; இறைவா! உனக்கு அடிமையானேன், இனி என் செயினும் செய்க! இன்பம் கனி - இன்பத்தைக் கனிவிக்கும்.
75. கரா - முதலை; மதலை - பிள்ளை; அவிநாசியில் முதலை வாய் பிள்ளை வரச் செய்தமை; திருமுதுகுன்றில் மணிமுத்தா நதியில் இட்ட 12,000 பொன்னை, திருவாரூர்க் குளத்தில் வரச் செய்தமை. இரண்டும் சுந்தரர் வரலாற்றில் நிகழ்ந்தமை. பீதம் - பொன்;

மாதேவா! ஒற்றியூர் வள்ளால்! அடியார்செய்
கோதே கொளாதகுணக் குன்றமே! - சூ(து)ஏய்
முலையாள் அமர் பாகா! முன்னவா! தீயேன்
உலையா(து) அருளை உதவு. 76

உதரஞ் சுமந்த உலகளந்தோன், மார்பத்(து)
அதரஞ் சிவந்தாள் அகலாக் - குதரம்
நிகர்மா ளிகைஆரூர் நின்மலா! என்று
பகர்வர்துன்(பு) ஓடும் பறந்து. 77

பறவையூர் தேவர் பரவும் புனிதா!
நறவைஆர் கொன்றைஅணி நாதா! - உறவை
அடையார் புரஞ்செற்ற அண்ணால்!தென் ஒற்றி
உடையாய் எனைஆள் உவந்து. 78

உவந்(து)ஆலம் உண்(டு)அமரர் ஊர்புரந்த நம்பா!
தவந்,தானம் சற்றேனும் சாரேன்;- சிவந்(து)ஆலம்
அன்னயமன் தோன்றில் அறியேன், ஆரூர்அரசே!
உன்னையன்றி வேறுதுணை ஒன்று. 79

---

எனக்குக் கண் தந்தால் நின் அருள் வளத்தில் மேலும் ஒன்றாகச் சேரும். பராவ - சுந்தரர் பதிகம் பாடி வழிபட.

76. கோதே - குற்றத்தை; கொளாத - குற்றமாகக் கொள்ளாது குணமாகக் கொள்ளும். சூது ஏய் - சூதாடு கருவி உவமையாகும். உலையாது - வருந்தாது.

77. அதரம்சிவந்தாள் - இலட்சுமி; குதரம் - மலை; உதரம் - வயிறு; உலகளந்தோன் - திருமால். கயிற்றை உதரத்தில் சுமந்தவன் (தாமோதரன்.)

78. பறவையூர் தேவர் - கருடனில் ஊரும் திருமால் (மயிலை ஊரும் முருகன்) பரவும் - வணங்கும்; நறவை ஆர் - தேனை நிறைந்துள்ள.

79. சிவந்து - கோபித்து; ஆலம் அன்ன யமன் - ஆலகால நஞ்சு போன்ற கொடிய இயமன்; உனை அன்றி வேறு துணை ஒன்று அறியேன்;

ஒன்று புகல் வேன்நன்(று) உணர் நெஞ்சே! நீ உனக்கு
நன்று புரிதற்கு நாடினால் - வன்திறல்மால்
ஏறுடையான் ஒற்றியூர் எம்மான்தன் சென்னிமிசை
ஆறுடையான் சீரையே ஆய். 80

ஆ(டு)அரவக் கிண்கிணிக்கால் ஐயா! பிறையோடு
சூ(டு)அரவச் செஞ்சடையாய்! தொண்டர்சீர் - பா(டு)அரவம்
ஓவாத் திருவாரூர் உத்தமா! நாயேனைக்
காவாமை நன்றோ? கழறு. 81

கழல் பணியக் கல்லார், கருது புகழ் சொல்லார்,
விழலுக்(கு) இறைத்தே விளிவார் - குழல்மொழியாள்
வாமத்தான் திங்கள் வார்சடையான் பொன்இதழித்
தாமத்தான் ஒற்றிநகர் சார்ந்து. 82

துன்(பு)எலாம் நீத்தோம், சுடுநோய் அறத்துறந்தோம்,
இன்பெலாம் எய்த இனித்தடையென்?- அன்பர்
உளத்தான்,தென் ஆரூர்வாழ் உம்பர்பிரான், நஞ்சார்
களத்தான், புகழ்நாக் கலந்து. 83

---

80. வன்திறல்மால் ஏறு - வலிய ஆற்றலுடைய திருமாலாகிய ஏறு. நாடினால் - விரும்பினால்; ஆய் - ஆராய்க! (ஆராய்ந்து ஓதி உய்க)

81. அரவம் - சப்தம்; அரவம் - பாம்பு; அரவம் - ஒலி; ஓவா - இடையறாத;

82. விளிவார் - அழிவார்; ஒற்றிநகர் சார்ந்து கல்லார், சொல்லார், விளிவர்.

83. நீத்தோம் - நீங்கினோம்; அற - முழுமையாக; புகழை நாவில் கலந்து ஓதினதால், துன்பம் நீங்கினோம். நோய் நீங்கினோம். இன்பம் அடைய இனித் தடையில்லை.

கரத்தில் அபய வரதங் கலந்தாய்,
சிரத்தில் சிரமாலை சேர்த்தாய், - வரத்தை
அருளாய்,அஞ் சேல்என்(று) அடியேனுக்(கு) என்னோ?
தெருளாளா! ஒற்றிஅர சே. 84

சேல் ஏந்தி னான்தீயத் தீத்த பழிதீர
வேல்ஏந்தி னானை விதித்தஅழல் - பாலவிழிப்
பித்தன், கமலைப் பிரான், எதனால் தீர்ப்பானோ?
பத்தற்(கு) அருளாப் பழி. 85

பழிஅஞ்சி என்(று) ஒருபேர் பண்டுகொண்டாய், அன்பர்
வழிஅஞ்சி அஞ்சிக்கால் வைத்துக் - குழிஅஞ்சி
ஆழப் புரிந்து, பழிக்(கு) அஞ்சான் எனும் பழியின்
மூழ்கல்ஒற்றி யாய்முறையா மோ? 86

மோலிமுடி சூடிமுறை நிறுவி னாய் அரசாய்,
நீலி இடத்து வைத்த நின்மலா! - சூலி!
திருமுன் முறையீ(டு)உன் செஞ்செவிஏ லாமை
தருமமோ? ஆரூர்அத் தா. 87

---

84. சிரமாலை - தலைமாலை; அபய வரத கரங்களால் அடியேனுக்கு அருள் செய்யாதது என்ன காரணம்?

85. சேல் ஏந்தினான் - மன்மதன்; வேல் ஏந்தினான் - திருமுருகன்; விதித்த - படைத்த; பாலவிழி - நெற்றி விழி; கருவேளை அழித்த பழிதீர, அதே நெற்றிக் கண்ணால் செவ்வேளைப் படைத்தளித்தாய்.

86. பழிஅஞ்சிய படலம் திருவிளையாடற் புராணச் செய்தி. கண்பார்வை தெரியாததனால் வழி நடக்க அஞ்சி அஞ்சிக் கால் வைத்து, குழியில் விழுவதால், பழி அஞ்சான் என்ற பெயரை இப்போது இறைவன் பெறுவான் என்கிறார்.

87. மோலி - சடைமுடி(யில்); முறை - நீதி; நீலி - உமையம்மை; சூலி - சூலத்தை உடையவனே. ஏலாமை - ஏற்காமை;

தாங்கும்இமில் ஏறாச், சரமாத், துவசமா,
வீங்கு முலைமனையா, வெம்பணியில் - தூங்கும்
ஒருவனைக்கொள் ஒற்றி யுடையாய்நா யேனை
மரு(வு)அடிமை யாக்கொள்ளு வாய். 88

வாரார் கயிலை மலையோ? மறைமுடியோ?
ஏரார்பூங் கோயிலோ? என் உளமோ? - சீர் ஆரூர்த்
தம்பிரான், கங்கைச் சடையான், பூங் கொன்றையணி
எம்பிரான் வாழும் இடம். 89

இடங்காவல் பூண்டாளுக்(கு) எந்தாய்நின் சென்னி
மடங்காத காதலொடு வைகுந் - தடங் கொங்கை
மின்னேயஞ் சொல்லேன்; விளங்(கு)ஒற்றி யூர்நம்பா!
பின்ஏ(து) எனக்(கு)அருள்வாய் பேசு. 90

பேசேன்நீ அன்றிப் பிறதெய்வம் உண்(டு)என்று;
கூசேன்; நினை என்றும் கும்பிடுவேன்;- ஏசேன்
பலி ஏற்றாய் என்(று); ஆரூர்ப் பண்ணவா! நோயான்
நலி(வு) ஓட் டுவ(து)எந்த நாள்? 91

---

88. இமில்ஏறு - கொண்டையுடைய காளை, சரம் - அம்பு; துவசம் - கொடி; வீங்குமுலை - உமையம்மை; மனை - மனைவியின் தாய் வீடு; வெம்பணியில் தூங்கும் ஒருவன் - கொடிய பாம்பின்மீது உறங்கும் திருமால். மருவு - பொருந்திய.

89. வாரார் - உயர்ந்து விளங்கும்; மறைமுடி - உபநிடதம்; ஏரார் - எழுச்சி (அழகு) பொருந்திய.

90. இடம் காவல் பூண்டாள் - இடப்பாகம் அமைந்த உமையம்மை; சென்னி வைகும் தடங்கொங்கை மின் - கங்கையாள். நீ கங்கையிடம் வைத்துள்ள அன்பை உமையம்மைக்குச் சொல்ல மாட்டேன்.

91. ஏசேன் பலி ஏற்றாய் என்(று) - பிச்சை எடுத்தாய் என்று இகழமாட்டேன்; நோயான் நலிவு - நோயுடைய என் சோர்வு;

நாளே, வினையே, நமனே, நவக்கோளே,
கோளே புரியஎனைக் கூடன்மின்,- தாளே
எனக்(கு) அளித்தான் ஒற்றியூர் எம்பிரான், என்புன்
மனக்குள்இருப் பான்என்றும் வந்து. 92

வந்தேன் திருமுன், மகிழ்ந்து பணிந் தேன், அமுதே!
செந்தேனே! கற்கண்டே! சீனியே! - நொந்தேனைக்
காஎன்றேன், ஆரூர்முக் கண்ணா! அருளாது
போஎன்றால் அன்றே புகழ். 93

புகழ்ச்சி விருப்(பு) இல்லார் புவனத்தில் யாரே?
இகழ்ச்சிவிருப் புள்ளார் எவரே? - புகழ்ச்சி
விரும்பினையேல் எற்கா,விமலா! தென்ஒற்றிக்
கரும்பினைநேர் சொல்லாள்பா கா. 94

பாகங் கலந்தமலைப் பாவையாய், பாவைமார்
மோகங் கலந்தமுழு மூடனேன் - தேகங்
கலந்தபிணி நின்னருள்முன் கால்முன்துய் யன்றோ?
நலந்தழையும் ஆரூர்அண் ணா. 95

அண்ணா!தென் ஒற்றியூர் ஆண்டவா! செந்தமிழால்
பண்ணார் கவிபாடிப் பாவலர்கள் - நண்ணா
இரக்கில்எதிர் பேசா(து) ஒன்(று) ஈயா(து) இருந்தால்
புரக்கும் வள்ளற்(கு) ஈதொருபண் போ? 96

---

92. நவக்கோள் - நவக்கிரகங்கள்; கோளே புரிய - தீமைசெய்ய; கூடன் மின் - கூடாதீர்கள். தாளே - திருவடி; புன்மனம் - தாழ்ந்த மனம். மனக்குள் இருப்பான் - மனத்திற்குள் இருப்பான்.

93. நொந்தேனை - வருந்திய என்னை; புகழ் அன்றே - புகழ் அல்லவே.

94. எற்கா (என் + கா) - என்னைக் காத்தருள்க.

95. பாவையாய் - பாவையை உடையவனே! கால்முன் துய் அன்றோ - காற்றின் முன் பஞ்சு அல்லவா?

போதன் பணிபாதன், புண்ணியன், தென்கமலை
நாதன், திருநாவல் நாவலர்க்குத் - தூதன்,
கலங்கும்எளி யேற்(கு)அருளாக் காரணம்என்? அந்தோ
துலங்கும் அருளைச் சுமந்து. 97

சுமந்தாய் அருளைச், சுடுநோய் தொலைக்காய்,
கமந்தான் இதுவோ? கழறாய்,- நமன்தான்
உருளஉதைத் தாய், ஒற்றி யூரா! உலகம்
மருள, அ(து)எங் குக் கொட்டு வாய்? 98

வாயாரப் பாடி, மனம்நெகிழச் சிந்தித்து,
நோயால்அந் தோஇன்னும் நோவேனோ?- தீயாரைப்
பாடிப் பரிசுபெறாப் பாவியோ யான்?மன்றத்(து)
ஆடிமகி ழுங்கமலை யாய். 99

ஆய்ந்தஅன்பர் கூடிக்கூத் தாடிப்பே ரானந்தம்
தோய்ந்துமகிழ் ஒற்றியூர்த் தொல்நகரில் - வாய்ந்தபரன்
ஆர்ந்தபுகழ் பாடும் அறிஞர்இல்லம் தோறும்என்றும்
சேர்ந்து மகிழுந் திரு. 100

திருச்சிற்றம்பலம்.

---

96. நண்ணா - நண்ணி (அடைந்து) இரக்கில் - யாசித்தால்;

97. போதன் - நான்முகன்; கலங்கும் - மனம் கலங்கும்; துலங்கும் - விளங்கும்.

98. தொலைக்காய் - தொலைக்க மாட்டாய்; கமம் - நிறைவு; கழறல் - சொல்லல்; நமன் - இயமன்; மருள - உன் அருளைப் பெறாது மயங்குமாறு. அது - (சுமந்திருக்கும்) அருளை.

99. பாவிகள் தீயாரை (கொடியவரை)ப் பாடி பரிசு பெறாது அழிவர். அடியேன் அப்படிப்பட்டவன் அல்லன்; நல்லோனாகிய நின்னைப் பாடியும் நோய் நீங்காது இருக்கலாமா?

100. ஆர்ந்த - நிறைந்த; திரு - திருமகள், செல்வம்; இறைவன் புகழ்பாடுவோர் இல்லங்களில் திருமகள் தங்கி மகிழ்ந்திருப்பாள்.

## சிறப்புப் பாயிரம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருக்கமலை யொடும் ஒற்றித் திருநகர்வாழ்
அருட்செல்வத் தியாகேசன், தொண்
டருக்(கு) அமலை இரந்தளித்தோன், அருக்கம்அலை
அணிவேணி அண்ணல் மீதே
இருக்க, மலைச் சிரகிரிவாழ் தியாகரா
சக்கவிஞன், எம்ம னோர்தம்
வருக்கம்மலை(வு) அற, அன்பின் முதல்பாஅந்
தாதிஒன்று வகுத்தான் மன்னோ. 1

ஆரூரி னொடும் ஒற்றித் திருநகரில்
புற்றிடங்கொண்(டு) அமர்ந்தே, ஆழித்
தேரூருந் தியாகேசன் இருந்தாடும்
செயற்(கு)ஏதுத் தெரியின், இந்த
ஏரூரும் புகழ்த்தியாக ராசநா
வலன்அன்பின் இயம்பு செப்பல்
சீரூரும் இன்துதியை முனம் அறிந்த
மகிழ்வென்று செப்ப லாமால். 2

---

1. அமலை இரந்தளித்தோன் - (சுந்தரருக்குச்) சோற்றுத் திரளைத் திருக்கச்சூரில் பிச்சையெடுத்து ஊட்டியவன். அருக்கம் - எருக்கம் பூ. அலை - கங்கை நீர்; வேணி - சடை; மீதே இருக்க - தங்கியிருக்க; மலைச் சிரகிரி - திருச்சிராப்பள்ளி; வருக்கம் - குலம்; மலைவு அற - மயக்கம் நீங்க; முதல் பா - வெண்பா.

2. ஏது - காரணம்; தெரியின் - ஆராயின்; செப்பல் - செப்பல் ஓசையுடைய வெண்பா; செப்பலாம் - சொல்லலாம். (ஆல் - அசை, பொருளற்ற சொல்)

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

# திருவாரூர் மருந்து வெண்பா மாலை

## காப்பு.

சீர்பூத்த ஆரூர்த் தியாகேச னைத்துதிக்க
நார்பூத்த இன்சொல் நனியருளும்; - ஏர்பூத்த
ஐங்கரம்நால் வாய்முக்கண் ஆர்ந்தருளி அன்பர்க்கு
மங்களஞ்செய் தெய்வ மருந்து.

## சமயாசாரியர்

தீயபிணி தீர்க்கும் சிரபுரத்து வாழ்மருந்து,
வாய்அர(சு)என் னும்பேர் கொள் மாமருந்து,- பாயவிழி
மாசகலப் பாடு(ம்)நா வல்மருந்து, மாணிக்க
வாசகப்பேர் பூண்ட மருந்து.

## நூல்.

திங்களணி வேணித் தியாகேசன் என்னும்பேர்
தங்கப் புனைந்த தனிமருந்து, - துங்கத்
திருவந் தருமருந்து, செய்யமறைச் சென்னி
மருவு(ம்) மருந்(து) ஆரூர் மருந்து. 1

---

காப்பு: தியாகராசரை மருந்து என்று நூல் பாடுதற்கேற்ப, விநாயகரையும் மருந்து என்று கூறினார். ஏர் பூத்த - எழுச்சி (அழகு) மிகுந்த; நால்வாய் - தொங்கும் வாய்; 5,4,3 என்பது எண்ணலங்காரம். மங்களம் - நன்மை; நனி - மிகுதியாக; நார் பூத்த - அன்பு மிகுந்த; சமயாசாரியார்: நால்வரையும் மருந்தாகவே கூறினார். சிரபுரம் - சீர்காழி; விழிமாசு - கண்பார்வை இழப்பு;

1. துங்கம் - உயர்வு (தூய்மை), மறைச்சென்னி - வேத உச்சியாம் உபநிடதங்கள். மருவும் - பொருந்தும்.

கொன்றை யணிந்த குணமருந்(து).அன் பர்க்(கு) என்றும்
நன்று மகிழ்ந்துபுரி நன்மருந்து - குன்றாத
காட்சிஅடி யேற்(கு) அருளும் கண்மருந்து. கல்வியால்
மாட்சிபெறும் ஆரூர் மருந்து. 2

மால் பிரமன் காணாத மாமருந்து. தன் புகழும்
நூல்பல ஆய்ந் தோர்பிறவி நோய் மருந்து. - காலன் காய்ந்(து)
எள்ளுதல் இல்லா எழில் மருந்து. ஏற்றவர்க்கு
வள்ளலாம் ஆரூர் மருந்து. 3

தேவர்க்(கு) அரிய திருமருந்து. தென்தமிழால்
மூவர் பரவும் முதல்மருந்து - காவார்
கரமருந்(து) என் கண்நோய் கரக்கும் மருந்(து) என்றும்
வரமருந்தாம் ஆரூர் மருந்து. 4

நீறு புனைந்த நிமல மருந்(து). ஓவாது
நாறுகுழல் பால்வைத்த நன்மருந்து - வேறுதுணை
இல்லாப் பெரிய எழில்மருந்(து) எல் லாம் செய்ய
வல்லதாம் ஆருர் மருந்து. 5

---

2. புரிதல் - செய்தல்; குன்றாத - குறையாத; மாட்சி - பெருமை;

3. எள்ளுதல் - இகழுதல்; காலனைக் காய்ந்ததை எவரும் புகழ்வரே தவிர இகழார்.

4. காஆர் - சோலையில் பொருந்தி; கரம் மருந்து - கையில் கிடைக்கும் மருந்து; கரக்கும் - மறைக்கும்; வரம் மருந்து - வரம் தந்தருளும் மருந்து.

5. ஓவாது நாறுகுழல் - எப்பொழுதும் இடையறாது இயற்கை மணம் வீசும் கூந்தல்; பால் வைத்த - ஒரு பாகம் வைத்த; நிமல - அழுக்கற்ற,

மால்ஏற்றில் காட்சிதரும் மாமருந்து. செங்கையில்
வேல்ஏற்ற கால்முளைஈன் மெய்மருந்து - கால்ஏற்ற
சென்னியார் ஏத்தும் திருமருந்(து) எல்லாநோய்க்கும்
வன்னியாம் ஆரூர் மருந்து. 6

பெண்ணை இடப்பால்கொள் பெருமருந்து. தன்வயிற்றில்
மண்ணைவைத்த ஏற்றில் வருமருந்து. - கண்ணை
அகழ்ந்தஅன்பர் கண்ட அருமருந்(து) எல்லோரும்
மகிழ்ந்துகொளும் ஆரூர் மருந்து. 7

ஆவணங் காட்டி அடிமை கொளும் மருந்து.
கோவணங்கள் எத்தில் கொளும் மருந்து. - தாவாக்
கதியடியார்க்(கு) ஈந்து களிக்கும் மருந்து.
மதிமுடித்த ஆரூர் மருந்து. 8

அன்பர்துயர் காணா அருமருந்து. தாள்பணியா
வன்பர்துயர் மாற்றா மருந்து.பேர் - இன்பம்
பயக்கும் மருந்(து) ஓர்நால்வர் பாடும்மருந்(து). என்உள்
மயக்(கு)அறுத்த ஆரூர் மருந்து. 9

---

6. மால்ஏறு - திருமாலாகிய காளை; கால்முளை - பிள்ளை; ஈன் - ஈன்ற; கால் ஏற்ற சென்னியார்; திருவடிகளைத் தலையில் சூடிக் கொண்ட அடியார்கள்; வன்னி - நெருப்பு.

7. தன் வயிற்றில் மண்ணை வைத்த ஏறு - திருமால், கண்ணன் அவதாரத்தில் மண்ணை உண்டார். கண்ணை அகழ்ந்த அன்பர் - கண்ணப்பர்.

8. சுந்தரர், அமர்நீதி நாயனார் வரலாறுகள். தாவாக்கதி - கெடுதல் இல்லாத கதி(சிவகதி)

9. அன்பர் X வன்பர். பயக்கும் - தரும்; உள்மயக்கு - அஞ்ஞானம்

வெள்ளம் முடித்தசடை மெய்மருந்து. நாயடியேன்
உள்ளப்பூங் கோயில் உறைமருந்து - கள்ளம்
இருவா உளத்தார்க்(கு) இனிக்கும்மருந்(து). இன்னல்
மருவாத ஆரூர் மருந்து. 10

காமனைக் காய்ந்தநுதல் கண்மருந்து. கூடலிலே
மாமனாய் வந்து வழக்குரைத்த - தேமருந்து
கன்னிஓர் பாகங் கலந்தமருந்(து). அங்கையிலே
வன்னிவைத்த ஆரூர் மருந்து. 11

மான்மழு அங்கைமிசை வைத்த தனிமருந்து.
தேன்அமர்பூங் கொன்றைத் திருமருந்து - கானமர்ந்த
வேட்டுவனார் ஊட்(டு)ஊன் மிசைந்தமருந்து. என்பிறவி
வாட்டும்மருந்து ஆரூர் மருந்து. 12

கந்தரத்து நீலம் கலந்தமருந்(து). இன்கவிசொல்
சுந்தரர்க்குக் கண்நோய் தொலைத்தமருந்(து) - இந்துமுடி
ஆர்ந்த மருந்(து). அம்பலத்தில் ஆடும்மருந்(து). ஓயாது
வார்ந்தபுகழ் ஆரூர் மருந்து. 13

கண்டக் கறைமருந்து. கால்மலர்சேர் மாணிக்காத்
தண்டதரன் காய்ந்த தனிமருந்து - துண்டப்
பிறையணிந்த சென்னிப் பெருமருந்து தூய
மறைபுகழும் ஆரூர் மருந்து. 14

---

10. திருவாரூர்க் கோயிலும் பூங்கோயில், உள்ளமும் பூங்கோயில்; கள்ளம் இருவா – வஞ்சகம் இருக்கச் செய்யாத.
11. கூடலில் மாமனாக வந்து வழக்குரைத்தது, திருவிளையாடற் புராணம். தேமருந்து – இனிக்கும் (தெய்வ) மருந்து. வன்னி – நெருப்பு.
12. அங்கைமிசை – அழகிய கையின்மீது. கான் – காடு. வேட்டுவனார் – கண்ணப்பர்; ஊன்மிசைந்த – மாமிசம் ஏற்றுக் கொண்ட.
13. கந்தரம் – கழுத்து; இந்து – சந்திரன்;
14. மாணி – மார்க்கண்டேயர்; தண்டதரன் – இயமன்;

வெம்பணியில் துஞ்சும் விடைமருந்து. மெய்யடியார்
நம்ப அருள்புரியும் நன்மருந்து - கம்பக்
களி(று)உரித்த கைமருந்து. காமன்தே ராய
வளி தவழும் ஆரூர் மருந்து. 15

அப்பர்குடர் நோய்தீர்த்(து) அருள்மருந்து. பாண்டியன்மெய்
வெப்பொடுகூ னும்தீர்த்த மெய்மருந்து - துப்பினையே
ஒத்த சடிலமருந்(து) உம்பர் தொழுமருந்து
மத்தமுடி ஆரூர் மருந்து. 16

என்பைப்பெண் ணாச்செய் எழில்மருந்து. சுந்தரர்மெய்த்
துன்பைத் தவிர்த்தருளும் தூயமருந்(து) - அன்பை
இழவார் பிறப்பறுக்கும் இன்மருந்(து) இல்தோறும்
மழவார்தென் ஆரூர் மருந்து. 17

விண்மணியைக் கண்ணாக்கொள் மெய்மருந்து. நாயடியேன்
கண்மணிக்கு முன்ஒளியைக் காட்டும்மருந்து - எண்ணும்மணி
கண்டன்என அண்டர் கரைமருந்து சோலைதொறும்
வண்டமர்தென் ஆரூர் மருந்து. 18

---

15. வெம்பணி துஞ்சும் விடைமருந்து - கொடிய பாம்பில் உறங்கும் திருமாலாகிய விடையை உடைய மருந்து. கம்பக்களிறு - அசையும் யானை; காமன் தேராய வளி - தென்றல் காற்று.

16. மெய் - உடம்பு; வெப்பொடுகூன் - வெப்பு நோயும் கூனும்; திருஞானசம்பந்தர் திருநீற்றுப் பதிகம் பாடி கூன் பாண்டியனின் வெப்பும் கூனும் தீர்த்தருளினார். துப்பு - பவளம்; சடிலம் - சடை

17. சம்பந்தர் திருமயிலாப்பூரில் பதகம்பாடி எலும்பைப் பூம்பாவை எனும் பெண் ஆக்கினார். சுந்தரர் உடல்தோல்நோய் திருத்துருத்தியில் நீங்கிற்று. மழவு - குழந்தை; இல்லம்தோறும் குழந்தையாக வந்துள்ள.

18. விண்மணி - கதிரவன், அண்டர் - தேவர்கள்; கரை - சொல்லும்.

தாமரையோன் சென்னி தடிந்தமருந்(து) என்பிறவி
நாமலைய ஓட்டும் நலமருந்து - தேமலைந்த
பூவடிஎன் சென்னி பொருத்தும் மருந்(து). ஏகம்ப
மாவடிவாழ் ஆரூர் மருந்து. 19

கண்சுமந்த நெற்றிக் கவின்மருந்து. வந்திக்கா
மண் சுமந்து பிட்டுண்ட மாமருந்து - பண்சுமந்த
சாமம் பரவும் தனிமருந்து. வெற்பரசி
வாமம்சார் ஆரூர் மருந்து. 20

பாம்பும் புலியும் பணிமருந்து. பாண்டியனாய்
வேம்பணியல் தாங்கும் வியன்மருந்து.- காம்பனைய
தோள்மா தொருபாகம் தோய்மருந்து. கண்ணாய
வாள்மாதர் ஆரூர் மருந்து. 21

இந்திரன் போற்றும் எழில்மருந்(து). ஈர் எண்கலைசேர்
சந்திரனைத் தேய்த்த தனிமருந்து - மந்திரமாம்
அஞ்செழுத்(து)உள் வாருக்(கு) அருள்மருந்து வாழ்பவர்கள்
வஞ்சம் அகற்(று) ஆரூர் மருந்து. 22

19. தாமரையோன் – பிரமன்; சென்னி தடிந்த - தலையைக் கிள்ளிய, பிறவி நாம் – பிறவி அச்சம்; மலைய - தொலையுமாறு; ஏகம்பம் மாவடி – காஞ்சிபுரத்தில் ஏகாம்பரர் மாவடியில் எழுந்தருளியுள்ளார். தேமலைந்த - தேன்பொருந்திய;

20. கவின் – அழகு; மாணிக்கவாசகர் வரலாறு. சாமம் - சாமவேதம்; வாமம் – இடப்பாகம்; வந்தி மூதாட்டிக்காகக் கூலி ஆளாய் இறைவன் வந்து மண்சுமந்து பிட்டு உண்டார்.

21. வேம்பு + அணியல் - வேப்பம்பூ மாலை. சோம சுந்தரப் பாண்டியனாக அணிந்தவர்; காம்பு அனைய தோள் - மூங்கிலைப் போன்ற தோள். கண்ணாகிய வாளை உடைய பெண்களுக்கு மருந்து.

22. ஈர் எண் கலைசேர் - 16 கலைகள் சேர்ந்த; உள்வாருக்கு - நினைப்பவர்கட்கு. வாழ்பவர்கள் - இறைவனை நினைந்து வாழ்பவர்கள்.

தாரணிந்த கொன்றைச் சடைமருந்து, வாமத்து
வாரணிந்த மென்முலையாள் வாழும்மருந்து - தேரணிந்த
வேதமுடி வைகும் வியன்மருந்து, வென்றசீர்
மாதவர்வாழ் ஆரூர் மருந்து. 23

பைவைத்த பாப்புப் பணிமருந்து, பாணருக்காத்
தெய்வக் கவிஎழுது சீர்மருந்து - நைவன்பர்க்கு
எய்தப் பொருந்தா வியன்மருந்து, கந்தரத்து
மைவைத்த ஆரூர் மருந்து. 24

வேளைப் பொடித்த விழிமருந்து, வெற்பெடுத்தான்
தோளை நெரித்த சுடர்மருந்து - தாளைப்
பரவும்அடி யார்துன்பம் பாற்றும் மருந்து
வரம்அருளும் ஆரூர் மருந்து. 25

சூலப் படைசுமந்த தொல்மருந்து, பாகத்தில்
ஏலக் குழலிஅமர் இன்மருந்து - கோலத்
திருப்பதத்தில் மால் விழிசேர் சீர்மருந்து, வன்றி
மருப்பணிந்த ஆரூர் மருந்து. 26

---

23. தார் - கழுத்தில் அணியும் மாலை; வார் - பெண்கள் மார்பில் அணியும் ஆடை. வென்றசீர் மாதவர் - ஐம்புலன்களையும் வென்ற சிறப்புடைய மா தவசிகள்.
24. பை - நச்சுப்பை; பாப்பு - பாம்பு; பணி அணிகலனாக; (பாம்புருவில் பதஞ்சலியார் பணிந்து வழிபடும்) பாணபத்திரர் சேரமான் பெருமாளிடம் சென்று பரிசில் பெறுமாறு இறைவன் சீட்டுக் கவி தந்தது, 11 ஆம் திருமுறையின் முதல் பாடல். கந்தரம் - கழுத்து. மை - கருமை.
25. கருவேளாம் மன்மதனை விழியால் எரித்துப் பொடியாக்கினார். வெற்பெடுத்தான் - கயிலையைத் தூக்கிய இராவணன். பாற்றும் - அழிக்கும்.
26. ஏலக் குழலி - மணம் பொருந்திய கூந்தலாள்; திருமால் திருவீழி மிழலையில் தன் கண்ணையே ஆயிரமாவது தாமரை மலராக திருவடியில் இட்டு அர்ச்சித்தார். வன்றி மருப்பு - பன்றிக் கொம்பு.

உழுவை உரியை உடுத்த மருந்து.
வழுவைஉரி போர்த்த மருந்து. - கழுவில்
கொடியரை ஏற்று குணமருந்து. செந்தேன்
வடிஇதழி ஆரூர் மருந்து. 27

தேமா நிழலில் சிறந்த திருமருந்து.
பூமாது போற்றும் புகழ்மருந்து. - கோமான்
முசுகுந்தன் கண்ட முதல் மருந்(து)அங் கையில்
வசுஏந்தும் ஆரூர் மருந்து. 28

கள்ளார்ந்த ஆத்திஅடி காத்தமருந்து. அன்பர்க்கு
வெள்ளானை ஈந்த வியன்மருந்து - நள்ளார்
புரம்எரித்த மூரல் புகழ்மருந்(து) யாரும்
வரம்உகக்கும் ஆரூர் மருந்து. 29

கற்றார் புகழும் கவின்மருந்து. காழியர்க்குப்
பொற்றாளம் தந்த பொருவில் மருந்து - அற்றார்க்கு
இருநிதியாய்க் காக்கும் இயல்மருந்து. சார்ந்தோர்
மருள்அகற்றும் ஆரூர் மருந்து. 30

---

27. உழுவை உரி - புலித்தோல்; வழுவை உரி - யானைத்தோல்; மதுரையில் திருஞானசம்பந்தர் அனல்வாதம், புனல் வாதத்தில் தோற்ற சமணர்களைக் கழுவில் ஏற்றினார். இதழி - கொன்றை;

28. முசுகுந்தர், இந்திரனிடமிருந்து பெற்று வந்த சிவலிங்கத்தை முதன்முதலில் திருவாரூரில் பிரதிட்டை செய்தார். வசு - சுடர்;

29. சிறுத்தொண்டருக்காக, திருச்செங்காட்டங்குடி ஆத்தி மரத்தின் கீழ் இறைவன் பைரவ அடியராகக் காத்திருந்தார். அன்பர்க்கு - சுந்தரர்க்கு; நள்ளார் - பகைவர்கள்; மூரல் - புன்சிரிப்பு; உகக்கும் - விரும்பும்.

30. திருஞானசம்பந்தர்க்கு இறைவன் திருக்கோலக்காவில் பொற்றாளம் தந்தருளினார். பொருஇல் - ஒப்பு இல்லாத; இருநிதி - பெரிய செல்வம்; 1. சங்கநிதி, 2. பதுமநிதி; மருள் - மயக்க உணர்வு.

சேல்கொடியன் சூரல்அடி சேர்மருந்து. புல்பறழைப்
பாற்கடல்கூய் உண்ணப் பணித்தமருந்து - ஏற்க
நுளையர்குலப் பெண்வேட்ட நோன்மருந்து. கூடல்
வளையல்விற்ற ஆரூர் மருந்து. 31

தேசம் புகழும் திருமருந்து. தேங்கொன்றை
வாசம் பொலிவேணி மாமருந்து. - பாசம்
அகழ்அடியார் உள்ளத்(து) அமரும் மருந்(து) ஒற்றி
மகிழடிவாழ் ஆரூர் மருந்து. 32

மண்ணொடுவிண் கீண்டு வளர்மருந்து. வான்கவிஞர்
எண்ணும்செந் நாஇருக்கும் இன்மருந்து - பண்ணொடு
இசைபாடித் தெவ்ஓட்டும் இன்பமருந்(து) ஆரும்
வசைபாடா ஆரூர் மருந்து. 33

சேந்தன் தவிட்டமு(து)உண் சீர்மருந்து. பூஞ்செல்வி
காந்தனுக்(கு) ஆழிதந்த காமர் மருந்து - ஏத்து
கொடியில் விடைவைத்த கோமருந்து. கற்போர்
மடியடையா ஆரூர் மருந்து. 34

31. சேல் கொடியன் - மன்மதன், (பாண்டியன்;) சூர்+அல்+அடி - அச்சத்தை அல்லாமல் செய்யும் திருவடி. புல்பறழ் - புலிக்கால் முனிவரின் குழந்தை உபமன்யு முனிவர். நுளையர் குலம். நெய்தல் நில மக்கள்; வேட்ட - விரும்பிய; நோன் - வலிய; மதுரையில் வளையல் விற்றதும், மீனவப் பெண்ணை விரும்பியதும் திருவிளையாடல் புராணம்.

32. அகழ்தல் - தோண்டியெடுத்தல்; திருஒற்றியூர் மகிழ மரத்தடியில் இறைவன் எழுந்தருளியது சுந்தரர் சங்கிலியாருக்குத் திருஒற்றியூரை விட்டுப் பிரியமாட்டேன் எனச் சத்தியம் செய்து தந்தபோது.

33. திருமாலும் பிரமனும் அடிமுடி தேடியபோது இறைவர் மண்ணும் விண்ணுமாக நின்றார். கீண்டு - பிளந்து கொண்டு. பாணபத்திரர் மாணவராக வந்து இசைபாடி ஏமநாத பாகவதரை ஓட்டியது திருவிளையாடல். தெவ் - பகை; வசை - பழி.

34. பூஞ்செல்வி காந்தன் - இலட்சுமி காந்தன் - திருமால். ஆழி - சக்கரம்; (திருவீழி மிழலையில்) காமர் - அழகிய; மடி - சோம்பல்.

பெற்றம் உவந்(து) ஏறும் பெரிய மருந்(து), எக்கலையும்
முற்ற உணர்ந் தோர் உணரும் முன்மருந்து,- நற்றவத்தோர்
சூழும் மருந்(து), ஓர் இரண்டு தூய செல்வம் நல்கு மின்னார்
வாழும்தென் ஆரூர் மருந்து. 35

வேதப் பரிஉகைத்த மெய்மருந்து வேகவதி
பாதமலர் நாறப் படர்ந்த மருந்(து) - ஓத
உலவாப் புகழ்மருந்(து) உத்தமர்க்குத் தீய
மலம்மாற்றும் ஆரூர் மருந்து. 36

மாயப் பகழிகொண்ட மாமருந்து, வஞ்சர்புரந்
தீயக், குறுமுறுவல் செய்மருந்து,- தூயகதி
நல்கும் அருமருந்து, நாடும் பெருஞ்செல்வம்
மல்கும்தென் ஆரூர் மருந்து. 37

கண்ணுக்(கு) இனிய கவின்மருந்து, காமர்மலைப்
பெண்ணுக்(கு) உயிராம் பெருமருந்து - விண்அமரர்க்(கு)
ஆவி உதவும் மருந்(து) ஆலம் அயில்மருந்து
வாவிசூழ் ஆரூர் மருந்து. 38

---

35. பெற்றம் – காளை; முற்ற – முழுமையாக; தூய செல்வம் நல்கும் ஓர் இரண்டு மின்னார் - இரண்டு அம்பிகையர். 1. அல்லியம் பூங்கோதை போக செல்வம் தருபவர். 2. கமலாம்பிகை – யோக செல்வம் தருபவர்.

36. வேதப்பரி - வேதமாகிய குதிரை; உகைத்த - செலுத்திய (மாணிக்கவாசகர் வரலாற்றுல் இந்நிகழ்ச்சி) வேகவதி - வைகையாறு. (கரையில் பாதம்பட வந்தது) உலவா - குறையாத; தீயமலம் - ஆணவம்,கன்மம், மாயை ஆகிய மும்மலங்கள்.

37. அர்ச்சுனன் தவம் செய்தபோது, இடையூறாக பன்றியாக வந்த அசுரன் மாயுமாறு பகழி கொண்டமை. பகழி – அம்பு; வஞ்சர் புரம் - முப்புரங்கள்; குறுமுறுவல் – புன்சிரிப்பு.

38. ஆவி -உயிர்; (ஆலகால நஞ்சை உண்டதால்) அயிலுதல் - உண்ணுதல். வாவி – குளம்.

வீதி விடங்கன்எனும் மெய்மருந்து, தூதாகிப்
பாதமலர் நோவப் படர்ந்த மருந்து - ஓதி
உணர்ந்தார் அறிந்தமருந்(து), உம்பரெலாம் வாழ்த்தி
வணங்குந்தென் ஆரூர் மருந்து. 39

தேவி மகிழத் திருநடனஞ் செய்மருந்து
பாவியேன் கண்நோயைப் பாற்றும் மருந்(து) - ஓவில்
அருளே திருமேனி யாக்கொள் மருந்து
மருள்ஏயா ஆரூர் மருந்து. 40

வானும் புவியும் வணங்கும்மருந்(து), அன்பர்க்குத்
தேனும்பா லும்போன்ற சீர் மருந்து, - கூனும்
குருடும் தவிர்மருந்து, குத்தரமான் கொங்கை
வருடும்கை ஆரூர் மருந்து. 41

வரத்தைஅடி யார்க்(கு)அருளும் வான்மருந்(து), அங்கி
கரத்தைத் தடிமருந்து, காவல் - புரத்தில்
தயித்தியரைச் சாடும் தனிமருந்து வேளூர்
வயித்தியனாம் ஆரூர் மருந்து. 42

---

39. சுந்தரர்க்காகத் தூது சென்றது. உம்பர் - தேவர்கள்.

40. ஓவு இல் - நீங்குதல் இல்லாத; மருள் ஏயா - மயக்க உணர்வு பொருந்தாத.

41. வானத்தவரும், மண்ணுலக மக்களும் வணங்குவர். பாண்டியன் கூன் நீக்கி நின்றசீர் நெடு மாறன் ஆக்கியது. சுந்தரர் மற்றும் தண்டியடிகளின் குருடு தவிர்த்தது. குத்தர மான் - உமையம்மை.

42. தட்சயாகத்தில் தீக்கடவுளின் (அங்கி) கை வெட்டப்பட்டது. தயித்தியர் - அசுரர்; வேளூர் - புள்ளிருக்கு வேளூர், வைத்தீசுவரன் கோயில்.

எய்யாப் புகழ்மருந்(து), ஏத்தித் தொழும் அடியார்
நையா(து) அருள்புரியும் நன்மருந்து - வெய்யர்
அடைய அரியமருந்(து), அற்றார்க்(கு) இனிய
மடை அருளும் ஆரூர் மருந்து. 43

இரந்(து)அமலை வன்தொண்டர்க்(கு) இட்ட மருந்து
பரந்தமலைப் பாவைமுலைப் பாலைச் - சுரந்(து)அன்பில்
காழிமழ வுக்(கு)அருத்தக் கண்ட மருந்(து) அண்டரெலாம்
வாழியஎன் ஆரூர் மருந்து. 44

வீழி மிழலைஇடை மேவியவா கீசருக்கும்
காழியர்கோ னுக்கும்பொற் காசளித்த - பாழிமருந்(து)
உம்பர் அமுதுண நஞ்(சு) உண்மருந்து, பூஞ்சோலை
வம்புசெறி ஆரூர் மருந்து. 45

மன்னும் கயிலை மலை மருந்து, வான்மதியம்
மின்னும் சடைமுடியில் வேய்மருந்து - முன்னும்
தனை இரந்தோர்க்(கு) ஈயும் தனிமருந்(து), அன்பர்
மனைஇரந்த ஆரூர் மருந்து. 46

---

43. எய்யா – குறைவடையாத; வெய்யர் - கொடியர்; மடை - சோறு;

44. அமலை - சோற்றுத்திரள். திருக்கச்சூரில் இறைவர் பிச்சையெடுத்து வந்து சுந்தரர்க்குச் சோறு ஊட்டினார். பரந்த - பரப்பளவு மிகுந்த (பெரிய); காழிமழவு – திருஞானசம்பந்தர். அருத்த – ஊட்ட; அண்டர் – தேவர்கள்.

45. திருவீழிமிழலையில் சம்பந்தர், அப்பருக்குப் பொற்காசு, படிக்காசாகத் தந்து பஞ்சம் போக்கச் செய்தார். பாழி – வலிமை. வம்பு – நறுமணம்.

46. மன்னும் – நிலைபெற்ற; வேய்தல் – சூடுதல்;

ஏ(டு) ஆற்(று) எதிர்ஏற்றும் இன்மருந்து. தன்னை என்றும்
நாடார் துயர்நாடா நன்மருந்து. - பீடார்
தலைவளைத்துத் தாடகைகைத் தார்கொள்மருந்து
மலைவளைத்த ஆரூர் மருந்து. 47

ததிவிரவு சோறு தருமருந்(து)அப் பர்க்கு.
விதிமுடியைக் கொய்மருந்து. மேலாம் - நதிமுடியில்
தாங்கும் மருந்(து). ஒண்கலத்தில் தாபதமின் னார்பிச்சை
வாங்கும் மருந்(து). ஆரூர் மருந்து. 48

தைப்பூசம் ஆ டத்தகும் என்(று) அருள் மருந்து.
மெய்ப் பூசும் நீற்று வியன்மருந்து - கைப்போதில்
மான்ஏந் தியமருந்து. மாமதுப்பெய் பூம்பொழில்கள்
வானேந்தும் ஆரூர் மருந்து. 49

---

47. சம்பந்தர் மதுரையில் புனல்வாதம் செய்தபோது. அவர் வைகையில் இட்ட ஏடு எதிர்த்துச் சென்றது. பீடு ஆர் - பெருமை பொருந்திய; திருப்பனந்தாளில் தாடகை என்ற பெண் மாலை சூட்ட முற்பட்ட போது. இடையில் ஆடை அவிழ. இருமுழங்கையாலும் இடுக்கினாள். அப்போது இறைவன் தலை வளைத்து அம்மாலையை ஏற்றுக் கொண்டார். மேருமலையை வில்லாக வளைத்தார்.

48. ததிசோறு - தயிர்சோறு; திருப்பைஞ்ஞீலியில் அப்பர்க்குப் பொதி சோறு தந்தது. விதி - பிரமன்; தாபத மின்னார் - தாருகாவனத்து முனிவர்களின் பத்தினிப் பெண்களிடம். கலம் - பிரம கபாலம்.

49. தில்லையில் நடராசர் பதஞ்சலி, வியாக்கிர பாதர் முனிவர்களுக்குத் தைப்பூச நாளில்தான் திருநடனம் செய்தருளினார். மாமது - தேன்; வானேந்து பூம்பொழில் - வான்வரை உயர்ந்துள்ள பூஞ் சோலைகள்.

ஓடு கவர்ந்(து)இளமை ஓர்அன்பர்க்(கு) ஈந்த மருந்(து).
ஏடுகனல் வேவா(து) இயற்றும் மருந்(து) - ஓடு
நரிபரியாச் செய்மருந்து. நாவலர்பா டும்சீர்
வரிபுனைந்த ஆரூர் மருந்து. 50

கண்களிக்கும் காட்சிக் கவின்மருந்து. கார்இமயப்
பெண்களிக்கும் பாகப் பெருமருந்து. - விண்களிக்க
ஆலம் அயின்றமருந்(து). அம்பொன் அடியடைந்தார்
மால்அகற்றும் ஆரூர் மருந்து. 51

இருந்(து)ஆடி இன்(பு)எவர்க்கும் ஈயும் மருந்து.
பொருந்தார்ஊர் சுட்ட புகழ்சேர் - மருந்து. மலர்த்
தாள்குறி அன்பர் தலைக்(கு)அருளித். தன்தலையில்
வாள்குறிகொள் ஆரூர் மருந்து. 52

மண்முன்இரு நான்குருவம் வாய்ந்த தனிமருந்து.
கண்மூன்(று) உடைய கவின்மருந்(து).- ஒண்மாழை
செங்கலைச் செய்மருந்து. தேவர் தொழும் மருந்து
மங்கல்இலா ஆரூர் மருந்து. 53

---

50. திருநீலகண்டக் குயவர் வரலாறு. திருஞானசம்பந்தர் அனல் வாதம் செய்தபோது. தீயில் இட்ட திருநள்ளாற்றுப் பதிகம் எரியாமல் பச்சைப் பதிகமாக இருந்தது. ஓடும் நரியைப் பரியாக (குதிரையாக)ச் செய்தது மணிவாசகர் வரலாற்றில் வரி - பாடல் வரிகள்.

51. கார் - கரிய நிறமுடைய; மால் - மயக்க உணர்வு.

52. இருந்தாடி - தியாகராசர் இருந்தாடும் அழகர், நடராசர் நின்றாடும் அழகர்; பொருந்தார் - பகைவர்; மலர்த்தாள் குறி - திருவடித் தாமரைகளையே அடையும் குறிக்கோளாகக் கொள்ளும். அன்பர் தலைக்குத் தாள் தந்து (திருவடிதீட்சை) இறைவன் தலையில் வாள் வெட்டுபட்ட அடையாளம் உள்ளதாகச் சில தலவரலாறுகள் உள்ளன.

53. மண், நீர், தீ, காற்று, வானம், சூரியர், சந்திரர், உயிர் என்று எட்டுருவம் உடையவர்; ஒண்மாழை - ஒளிபொருந்திய பொன்னாக; சுந்தரர் திருப்புகலூரில் செங்கல் தலை வைத்துத் தூங்கியபோது செங்கல் செம்பொன் ஆயிற்று. மங்கல் இலா - ஒளிகுறையாத.

குன்றுசிலை யாக்கொள் குணமருந்து, வேதனொடு
கன்றுகுணிலாக் கொண்டோன் காணாமல் - நின்றுதழல்
ஓங்கலா ஓங்கி ஒளிரும்மருந்(து) அம்மைக்கு
மாங்கனிநல்(கு) ஆரூர் மருந்து. 54

பாசு பதவாளி பார்த்தற்கு நல்கும்மருந்(து)
ஏசல்இல்ஆ னாயர் இசைக்(கு) உருகும் - மாசில் மருந்(து)
இன்னல் அடி யார்க்(கு)இசையா இன்மருந்(து) இன்பேஉருவாய்
மன்னும்மருந்(து) ஆரூர் மருந்து. 55

புற்றிடங் கொண்ட புகழ்மருந்(து), என் புன்பவநீர்
வற்றிடச் செய்த வளமருந்து, - கற்றாப்
புரந்த கணைமருந்து, பொன்குளத்தில் கொள்ள
வரந்தந்த ஆரூர் மருந்து. 56

நம்பினோ ரைக்கை நழுவவிடா நன்மருந்து
வெம்பினேன் வெந்நோயை வீட்டும் மருந்(து) - எம்பிரான்
என்னப்பூங் கோயில் இருக்கும் மருந்(து), ஓர்ஐந்து
வன்னத்தென் ஆரூர் மருந்து. 57

---

54. சிலையா - வில்லாக; வேதன் - பிரமன்; கன்று குணிலாக் கொண்டோன் - திருமால்; தழல் ஓங்கல் - தீ மலை(யாக ஓங்கி நின்றான்.) காரைக்காலில் புனிதவதி அம்மைக்கு மாங்கனி நல்கினான்.

55. அர்ச்சுனனுக்குப் பாசுபதமாகிய அம்பு நல்கினான். ஏசல்இல், மாசு இல் - குற்றம்இல்லாத; ஆனாய நாயனாரின் புல்லாங்குழல் இசைக்கு மயங்கினான். அடியார்க்கு இன்னல் இசையா (விரும்பா) மருந்து.

56. பவநீர் - பிறவிக்கடலை; சுந்தரர் திருமுதுகுன்றம் ஆற்றில் இட்ட பொன்னைத் திருவாரூர்க் குளத்தில் எடுத்தார். கற்றா - கன்று+ஆ - கன்றையீன்ற பசு; கணை - திரட்சி; புரந்த - காத்த.

57. வீட்டும் - அழிக்கும். நிறங்கள் ஓர் ஐந்துடையாய் - சிவபுராணம்.

மதிசேர் சடைமருந்து. வன்தொண்ட னார்க்குப்
பொதிசோறு தந்த புகழ்சேர் - நிதிமருந்து.
நாளைப்போ வார்காண நந்திவிலக் கும்மருந்து.
வாளைச்செய் ஆரூர் மருந்து. 58

புத்தன் தலையில்இடி வீழப் புரிமருந்து.
முத்தன்என வேதம் மொழிமருந்து. - சித்தனாய்க்
கல்லானை தின்னக் கரும்பு தருமருந்து
மல்லார்தென் ஆரூர் மருந்து. 59

தூசொலிக்கும் கல்மோதுந் தொண்டர்தலை தாங்கும் மருந்(து)
ஏசொலிகே ளாச்செவிகொள் இன்பமருந்(து) - ஆசை
உடுத்த மருந்(து) அண்டங்கீண்(டு) ஓங்கும் மருந்து
வடுத்தவிர்ந்த ஆரூர் மருந்து. 60

பன்றிபுவி கீண்(டு)அறியாப் பாத மலர்மருந்(து)
ஒன்றிஒன்றா இன்(பு)எற்(கு) உதவும் மருந்(து) - என்றும்
அழியாப் புகழ்மருந்(து). அன்பரெலாம் செல்நல்
வழிதேற்றும் ஆரூர் மருந்து. 61

---

58. சுந்தரர்க்குப் பொதிசோறு தந்தது திருக்குருகாவூரில். தில்லைக்கு நாளைப்போவேன் என்ற நந்தனார்க்கு நந்தியை விலக்கியது திருப்புன்கூரில். வாளைச்செய் - வாளை மீன்களை உடைய வயல்.

59. புத்தன் தலையில் இடி விழுந்தது போதிமங்கை என்ற ஊரில் (சம்பந்தர் வரலாறு). சித்தராய்க் கல்லானை கரும்பு தின்ன வைத்தது திருவிளையாடற்புராணம். மல்லார் - வளம் நிறைந்த.

60. தூசு + ஒலிக்கும் - ஆடையை அடித்து ஒலிக்கும்; தொண்டர் - திருக்குறிப்புத் தொண்டர்; ஆசைஉடுத்த - திசை (யையே) ஆடையாக உடுத்த.

61. கீண்டு - அகழ்ந்து; தேற்றும் - தெளிவு செய்யும். எற்கு - எனக்கு.

அப்பூதி யார்சேயை அண்ணுவிடந் தீர்த்த மருந்(து)
ஒப்போ துறாநின்ற வூர்ப்பூசல் - தப்பின்றிச்
செய்தமனக் கோயில்குடி சேர்மருந்து, செங்கையிலே
வைஅமர்சூல் ஆரூர் மருந்து. 62

இன்பமழ வன்புதல்வி எய்தும்நோய் தீர்த்த மருந்து
அன்பர் பனியால் அடைந்தகொடுந் - துன்(பு)அகலப்
பண்ணும் அருமருந்து, பாவியேன் கண்மாசு
மண்ணும்மருந்(து) ஆரூர் மருந்து. 63

ஈசன்என ஓர்மொழிப்பேர் எய்தும் அருமருந்து,
வாசமலர்க் கொன்றை வனைந்த மருந்(து), - ஆசில்
குருமருந்(து), இன்பங் கொடுக்கும்மருந்து, ஒண்சீர்
மருவும்மருந்து, ஆரூர் மருந்து. 64

தாயிரங்காய் என்னத் தகும்மருந்து, சம்பந்தர்க்கு
ஆயிரம் செம்பொன் அருள்மருந்து - நோயோடு
இருந்து வருந்துவர்முன் எய்தியந்நோய் தீர்க்கும்
மருந்து,திரு ஆரூர் மருந்து. 65

---

62. அப்பூதியார் சேய், மூத்த திருநாவுக்கரசு பாம்பு கடித்து இறந்தபோது, அப்பர் ஒன்று கொலாம் பதிகம் பாடி உயிர்ப்பித்தார். திருநின்றவூரில் பூசலார் கட்டிய மனக் கோயிலில் இறைவன் எழுந்தருளினார். வை - கூர்மை; அமர் - பொருந்திய; சூல் - சூலம்;
63. மழவன் மகள் முயலகன் நோயால் வருந்தியபோது சம்பந்தர் துணிவளர் திங்கள் பதிகம் பாடி நலம் பெறச் செய்தார். (திருப்பாச்சில் ஆச்சிராமம்) திருச்செங்கோட்டில் (கொடிமாடச் செங்குன்றூர்) அன்பர்கள் பனி நோயால் வருந்தியபோது சம்பந்தர் திருநீலகணடப் பதிகம் பாடி நலம் பெறச் செய்தார்; மண்ணும் - கழுவும் (நீக்கும்)
64. ஆசு இல் - குற்றம் இல்லாத; குரு - ஞானாசிரியர். ஒண்சீர் - சிறந்த சீர்.
65. சம்பந்தர் தம் தந்தை வேள்வி செயும் பொருட்டு, திருவாவடுதுறையில் ஆயிரம் பொன் பெற்றார். எய்தி + அந்நோய்;

குவிகைசிரங் கொண்(டு) அடியார் கூத்தாட, முத்துச்
சிவிகை கவிகைதிருச்சின்னம் - புவிபுகழ
ஆளுடைய பிள்ளையார்க்(கு) அன்றருளிச் செய் மருந்(து) ஒண்
வாளுடைய ஆரூர் மருந்து. 66

விற்கொண்(டு) அடித்த விசயற்(கு) அருள்மருந்து
கற்கொண்ட சாக்கியனார் கண்டமருந்து - அல்கொள்
களமருந்து, சோழன் கவின்ஆரம் பூண்ட
வளமருந்து ஆரூர் மருந்து. 67

கமரில்கை தோற்றிக், கழுத்(து)அரி கைபற்றித்
தமராய்த் தடுத்து, விடேல் சத்தம்-அமர
எழுப்பி, விடைக் காட்சி அன்பர்க்(கு) ஈந்தமருந்(து) என்றும்
வழுத்தவிர்ந்த ஆரூர் மருந்து. 68

கல்புணையால் சொற்கோன் கடல்ஏறச் செய்மருந்து,
மல்புனைபூ தத்தால் மலைபோன்ற - நெற்குவையை
வீடுமறு(கு) எங்கும்நிறை வித்தமருந்(து), ஒண்சிகரி
மாடுபுனை ஆரூர் மருந்து. 69

---

66. திருநெல்வாயில் அரத்துறையில், சம்பந்தர்க்கு, முத்துச் சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்னம் இறைவன் தந்தருளினார். குவிகை சிரங்கொண்டு - கையைத் தலைமேல் குவித்து, ஒள்வாள் - ஒளி பொருந்திய வாள்; அதற்கு வீரகண்டயம் எனப் பெயர்.
67. விசயன் - அருச்சுனன், அல் - இரவு (இருள்) களம் - கண்டம்; உறையூர்ச் சோழன், காவிரியில் விட்ட ஆரத்தை அபிடேக நீர்வழி திரு ஆனைக்கா இறைவன் ஏற்றுக் கொண்டான்.
68. அரிவாள்தாயர் வரலாறு. கமர் - நிலப்பிளவு. வழு - குற்றம்.
69. சொற்கோன் - திருநாவுக்கரசர். திருக்கோளிலி பெருமான், குண்டையூர் கிழார் வேண்டிய வண்ணம் சுந்தரர்க்குத் தந்த நெல்லை, பூதங்கள் கொண்டு திருவாரூர் வீடுகள் வீதிகள் எங்கும் நிறைவிக்கச் செய்தார். ஒண்சிகரி - சிறந்த கோபுரங்கள்; மாடுபுனை - பங்கங்களில் அலங்கரிக்கும்.

வீயாச் சிரகிரியின் மேயசெட்டிப் பெண்ணுக்கு
மாயாத் தயில மருந்(து) ஏந்தித் - தாயாய்வந்(து)
அன்பாய் மருத்துவஞ் செய் ஆன்றமருந்(து) ஒண்கடல்சூழ்
மன்பார்சொல் ஆரூர் மருந்து. 70

கன்றிழந்த ஆஇரக்கங் கண்டு,தே ரூர்ந்தசேய்க்
கன்(று)உயிர் தந்த மருந்(து). ஆரூர்க்(கு) - ஒன்றும்
அருச்சனைபாட் டென்ற அருமருந்து. சோலை
மருச்செறிதென் ஆரூர் மருந்து. 71

காலன்கன் றாகக் கறக்கும் பசுவாகி
ஏல உலாய எழில்மருந்து. - சால
இறுகும் மனத்தேற்கு இரங்கும்மருந்(து). அம்தேர்
மறுகுதிகழ் ஆரூர் மருந்து. 72

கலத்தில் படைத்த கறிமீண்டு சேயாய்
நலத்தின்வரச் செய்மருந்து. நந்தன் - குலத்தில்
உயர்மறையோ னாய்த்தாள் உறச்செய் மருந்து
மயர்(வு)அகற்றும் ஆரூர் மருந்து. 73

---

70. திருச்சியில் ஒரு செட்டிப் பெண் மகப் பெற்றபோது, தாயாய் எழுந்தருளி மருத்துவம் பார்த்தருளினார். எனவே அவர் தாயுமானவர் எனப் பெயர் பெற்றார். தயிலம் - எண்ணெய்;

71. மனுநீதிச் சோழன் வரலாறு. அருச்சனை பாட்டே என்று சுந்தரரைச் சொற்றமிழ் பாடப் பணித்தார். மரு - மணம்; செறி - மிகுந்த;

72. மனுநீதிச் சோழன் வரலாற்று நிகழ்ச்சியே. இறுகும் மனத்தேற்கு - இறுக்கமாகும் மனமுடைய எனக்கு. மறுகு - வீதி.

73. சிறுத்தொண்டர் வரலாறு. நந்தனார் தீயில் மூழ்கி மறையோனாக எழுந்து, தில்லையில் வீடு பெற்றமை.

காட்ட, மறைக் காட்டில் கதவுதிறக் கும்மருந்து,
மீட்டுஅக் கத(வு)அடைக்கும் மெய்ம்மருந்து - வேட்ட
அதிபத்தர் பொன்மீன்பெற்(று) ஆண்டமருந்(து), அன்பர்
வதியுற்ற ஆரூர் மருந்து. 74

பொய்யா மருந்து, புனல்சூ டியமருந்து,
மெய்யார்க்(கு) ஒளியாய் மிளிர்மருந்து;- நையா
உளத்தார்க்(கு) இருளாய் ஒளிக்கும்மருந்(து), இன்ப
வளத்தால்ஆர் ஆரூர் மருந்து. 75

அண்டி வணங்கா அமணர்குரு டாய் ஓடத்
தண்டிஅடி கட்(கு) இருகண் தந்த மருந்(து) - உண்டிஇரா
நஞ்(சு)அமுதா நாவரசர் நன்(கு)அருந்தச் செய்மருந்து,
மஞ்சுதிகழ் ஆரூர் மருந்து. 76

சொல்லரசை மாவேழம் சூழ்ந்துவணங் கிச்சமணர்க்
கொல்லத் திருப்பு குணமருந்து, - பல்லவனைச்
சைவக் கரையேற்று தண்மருந்(து)அன் பர்க்குமல
மைவிலக்கும் ஆரூர் மருந்து. 77

---

74. காட்ட - கருவறையில் இருக்கும் இறைவனை. அன்பர்களுக்குக் காட்ட. அப்பர் கதவு திறக்கவும் சம்பந்தர் மீண்டும் அடைக்கவும் பாடினர். வேட்ட - விரும்பிய. வதியுற்ற - வாழ்தலுற்ற;

75. ஒளிக்கும் - மறைக்கும். ஆர் - நிறைந்திருக்கும்.

76. பார்வையற்ற தண்டி அடிகள் திருவாரூர்த் திருக்குளத்தில் சமணரை எதிர்த்துத் தூர் வாரியதுடன், திருவருளால் கண் ஒளி பெற்றார். உண்டி - உணவு. இராநஞ்சு - இருள் நிறமான நஞ்சு. சமணர்கள் பால் சோற்றில் நஞ்சு கலந்து நாவரசர்க்குத் தந்தபோது, நஞ்சும் அவர்க்கு அமுதமாயிற்று. மஞ்சு - மேகம்.

77. வேழம் - யானை; பல்லவன் - மகேந்திரவர்மன் (சமணத்திலிருந்து சைவம் ஆனான்.) மலமை - மலத்தை (மலம் +ஐ - ஐவகை மலம் எனவும் சொல்லலாம்)

நீற்றறைவா கீசருக்கு நீர்வாவி யாய்இளந்தென்
காற்றாய் அமுத கலைமதியாய்த் - தோற்றிச்
சுகஞ்செய்யச் செய்மருந்து, தொல்மறையோர்கூடி
மகஞ்செய்யும் ஆரூர் மருந்து. 78

திருக்கயிலைக் காட்சிதரி சிக்கக்கை கால்மார்(பு)
உருக்கலையச் சென்ற அப்பர்க் குத்தம் - திருக்காட்சி
ஐயாற்(று) அருளும்மருந்(து) அங்களத்தில் வெய்யகடு
வைஆற்றும் ஆரூர் மருந்து. 79

தந்தைக் கொலைசிவ தர்மமாச் சேய்ஞலூர்
வந்தபிள்ளை யார்க்(கு)அருளும் மாமருந்து;- சுந்தரர்முன்
ஆற்றினில்இட் டுக்குளத்தில் ஆய்ந்தெடுத்த பொன்சேயான்
மாற்றுரைத்த ஆரூர் மருந்து. 80

சேரர் பெருமானார் செய்ம்மும் மணிக்கோவை
ஏரமையக் கேட்டமருந்(து) ஏயர்கோன் - சீர்வயிற்றுச்
சூலை நம்பி போய்த் தீர்க்கச் சொல்மருந்து செங்கழுநீர்
மாலைபுனை ஆரூர் மருந்து. 81

---

78. நாவரசரை சுண்ணாம்பு அறையில் விட்டபோது நாவரசரின் மாசில்வீணையும் பாடலின் அனுபவம் இப்பாடல். மகம் - வேள்வி.

79. அப்பர் திருக்கயிலை செல்ல முயன்று, திருவையாற்றில் திருக்கயிலாயம் கண்ட காட்சி; வெய்ய கடுவை - கொடிய நஞ்சை; அம்களத்தில் - அழகிய கழுத்தில்; ஆற்றும் - பொறுக்கும்.

80. சண்டேசர் வரலாறு. சேயான் - விநாயகரால். மாற்றுரைத்த பிள்ளையார் என எழுந்தருளியுள்ளார்.

81. ஏரமைய - அழகாக; நம்பி - நம்பியாரூரர்; செங்கழுநீர் மாலை திருவாரூர் இறைவனுக்குச் சிறப்பு.

சீர்த்தி மதுரையில்கை தேய்த்ததிருத் தொண்டராம்
மூர்த்திக்(கு) அரசளித்த முன்மருந்து;- பூர்த்திநமி
நந்திநீரால் விளக்கு நன்(கு)எரிக்கச் செய்மருந்து,
வந்துவிண்சூழ் ஆரூர் மருந்து. 82

மாமணத்தின் மானக்கஞ் சாறனார் மாமகளார்
பூமணக்கும் கூந்தல்நம் பூணூலுக்(கு) - ஆம் என்(று)
அரிந்து வளர் வித்த அருமருந்து, நாகம்
வரிந்தவரை ஆரூர் மருந்து. 83

அன்புருவாம் காரைக்கால் அம்மைதிரு அந்தாதி
இன்புறக் கேட்ட மருந்(து)ஏர்முரு - கன்பூண்டி
யில்கவர்ந்த பொன்நம்பி ஏத்தத் தருமருந்து
மல்கலந்த ஆரூர் மருந்து. 84

உதியர் பிரான் வன்தொண்ட ரோ(டு)ஐயா(று) ஏக
நதிவிலகி மேற்புறத்தில் நண்ணி - வதிஉதவ
ஆற்றும்மருந்(து), ஒண்மன்றத்(து) ஆடும்மருந்(து) என்கவலை
மாற்றும் மருந்(து), ஆரூர் மருந்து. 85

---

82. சீர்த்தி - புகழ்மிக்க; மூர்த்தி நாயனார் வரலாறு; நமிநந்தியடிகள் நீரால் விளக்கு எரித்தது, திருவாரூர் கோயிலுள் அமைந்த அரநெறியப்பர் சந்நிதி. வந்து - காற்று.

83. மானக்கஞ்சாறர் மகளுக்கும் ஏயர்கோன் கலிக்காமர்க்கும் திருமணம் நடந்தபோது நடந்த நிகழ்ச்சி; நாகம் வரிந்த வரை - வாசுகி என்ற பாம்பைக் கயிறாகக்கட்டிய மேருமலையாகிய வில்.

84. அற்புதத் திரு அந்தாதி அம்மை பாடியது. நம்பியாரூரர் திருமுருகன் பூண்டியில் பொன்இழந்து, பின் பெற்றார்.

85. உதியர்பிரான் - சேரமான் பெருமாள்; வன்தொண்டர் - சுந்தரர்; ஏக - செல்ல; நண்ணி - அடைந்து, வதி உதவ - வழி உதவ;

தாலி கொடுத்(து)எதிரே சார்குங் குலியத்தை
ஏலக் கொடு.தூபம் இட்(டு)உவந்த - நூலணிந்த
மார்பரைஇல் சென்(று)உண்க மாஎன்ற நன்மருந்து.
வார்புகழ்ஆர் ஆரூர் மருந்து. 86

கழுத்திற் கயிறு கலையனார் பூண்(டு)அன்(று)
இழுத்தபின்நேர் நின்ற மருந்(து). யாரும் - வழுத்தக்
குருந்தடியில் வாதவூர்க் கோமானை ஆண்ட
மருந்து.திரு ஆரூர் மருந்து. 87

ஆரூர்ப் பிறந்தார்கள் ஆரும்நமி நந்திநம்
சீரூர் கணங்கள்எனச் செப்புமருந்(து).- ஏரூரும்
ஆண்பனை காய்க்க அருளும் மருந்(து), ஆரருள்சேர்
மாண்(பு)அகலா ஆரூர் மருந்து. 88

வேனில்வெப் பந்தவிர வெள்ளியமுத்(து) இன்பந்தர்
மேல்நிழற்ற வேணுபுர வேந்தர்க்குத் - தான்அளித்த
தண்மருந்து. சங்கத் தமிழ்ப்புலவ ரோ(டு) ஆய்ந்த
வண்மருந்(து) ஆரூர் மருந்து. 89

---

86. குங்குலியக் கலயனார் வரலாறு. நூலணிந்த மார்பர் (அந்தணர்) ஏலக் கொடு - ஏற்குமாறு கொண்டு; உண்கமா - மா அசைநிலை.

87. தாடகை என்ற பெண்ணுக்காக வளைந்த திருப்பனந்தாள் பெருமானை கலையனார் நிமிர்த்தினார்.

88. திருமணலி விழாவில் எல்லோரோடும் கலந்து கொண்டதால் தீட்டு எனக் கருதிய நமிநந்திக்கு இறைவர் இவ்வாறு அருளினார். திரு ஓத்தூரில் ஆண் பனையைக் காய்க்கச் செய்தவர் சம்பந்தர்.

89. வேணுபுர வேந்தர் - சம்பந்தர்.
கண்ணுதற் பெருங்கடவுளும் கழகமோடு அமர்ந்து
பண்ணுறத் தெரிந்தாய்ந்த பைந்தமிழ்
- திருவிளையாடல் புராணம்.

நாகைக்கா ரோணத்தில் நாவலூர் நம்பிக்கு
வாகைப் புரவிமணி மாலைமுதல் - ஓகையொடு
தந்த மருந்(து) இளசை சார்மாறர் முன்.பசித்து
வந்த மருந்(து) ஆரூர் மருந்து. 90

இந்தனம் தாங்கி எழில் மதுரை மாமறுகில்
வந்து விலைபகர்ந்த மாமருந்து - சந்தமலி
போதந் தருமருந்து, பூவணத்தில் சென்(று)இரத
வாதம்செய் ஆரூர் மருந்து. 91

ஆறு சுவைஅமுதம் அன்பின் முகமனொடு
நாறு குழற்கௌரி நன்(கு)ஊட்ட - வீறுபெற
உண்ட முதியமருந்(து) ஒண்காளையாய் மழவாம்
அண்(டு)அழகார் ஆரூர் மருந்து. 92

மலையத் துவசன்பொன் மாலையோ(டு) ஆட
வலையத்தி யோரேழ் அழைத்த - நிலைமருந்(து)
அட்டசித்தி மாதர் அறுவர்க்கு அருள்மருந்து
மட்டவிழ்தார் ஆரூர் மருந்து. 93

---

90. வாகைப் புரவி - வெற்றிக்குதிரை; ஓகை - மகிழ்ச்சி; மாறர் - இளையான்குடி மாறர்;

91. இந்தனம் – விறகு; திருவிளையாடற் புராணம்; சந்தமலி போதம் – இசைபாடி, ஏமநாதர்க்கு ஞானம் தந்து ஆணவம் நீங்கச் செய்தார். போதம் - ஞானம். பூவணத்தில் பொன்னனையாள் என்ற பெண்ணுக்காக இறைவன் இரசவாதம் செய்தார்.

92. விருத்த குமார பாலரான திருவிளையாடல்.

சிங்கத்தைச் சிம்புளாய்ச் செற்ற மருந்(து). அண்டருடல்
அங்கத்தைப் பூண்ட அருமருந்து.- திங்களொடு
கங்கை அணிமருந்து. காமர் மலைபயந்த
மங்கைசேர் ஆரூர் மருந்து. 94

மாமை திகழ்மருந்து. மாலைத் துழாயணிந்த
ஆமை முதுகோ(டு) அணிமருந்து;- காமன்உயிர்
அன்(று)இரதி வேண்ட அருள்மருந்து. வீதிதொறும்
அன்று திகழ் ஆரூர் மருந்து. 95

மழுவால் எறிபத்தர் மாய்த்த கைம்மாப் பாகர்
எழுமா(று) அருளும் மருந்(து). இன்பின்-வழுவா
அலர்சீர்ச் சிவகாமி யாண்டார்பூங் கூடை
மலர்சேர்த்த ஆரூர் மருந்து. 96

சிலந்தி அரசாய்க்கோச் செங்கண்ணான் என்று
நலந்திகழத் தோன்றி. அன்பு நண்ணி - வலந்திகழ
ஆக்குதளி மேவி அமரும் அருமருந்து.
மாக்கவினார் ஆரூர் மருந்து. 97

---

94. இரணியனைக் கொன்ற நரசிங்கம் வெறிபிடித்து அலைந்தபோது, சரபப் பறவையாய் எழுந்தருளி, அடக்கிய மருந்து. பிரம விஷ்ணுக்களின் உடல் எலும்புகளை அணிந்தவர்.

95. மாமை - அழகு; ஆமை - கூர்ம அவதாரம்.

96. எறிபத்த நாயனார் வரலாறு; கைம்மா - யானை;

97. தளி - கோயில்; வலந்திகழ ஆக்கு தளி - அன்பர்கள் வலம் வருமாறு உருவாக்கிய கோயில்கள்.

நலம்பொலியும் சேரர்பிரான் நன்குகொளப் பாதச்
சிலம்பொலி கேட்பித்(து)அருளின் செல்வ - வலம்பொலிநன்
நாவலூர்க் கோன்நண்பு நல்குமருந்(து). அம்பொழில்வாய்
மாவலூர் ஆரூர் மருந்து. 98

திருமருகல் செட்டி விடந் தீர்ந்(து)உய்யச் செய்த
அருமருந்து, வேணுபுரத்(து) அன்பர்க்(கு) - இருநதிநீத்(து)
ஓடங் கரைசேர உந்துமருந்(து). அம்பொன்செய்
மாடமலி ஆரூர் மருந்து. 99

திருமருந்து, வேதச் சிரமருந்(து)ஆ னந்தந்
தரும்மருந்(து), என் கண்நோய் தவிர்க்கும் - அருமருந்து
தேமருந்து, நேருந் தியாகேசன் என்னும்பேர்
மாமருந்(து), ஆரூர் மருந்து. 100

---

98. சேரமான் பெருமாள் சிவபூசையில் சிலம்பொலிக்கக் காலம் தாழ்த்தி, சுந்தரர் தில்லையில் வணங்கும் நிலையில் மனம் ஈடுபட்டதால் காலம் தாழ்த்தியதாகக் காரணம் கூறி, சேரமான் சுந்தரரைப் பார்க்கும் ஆவலைத் தூண்டி, இருவரும் நண்பராகச் செய்தது.

99. வைப்பூர் தாமனின் மகள், தம் முறை மாமனோடு உடன் போக்காகத் திருமருகல் வந்தபோது, மணமகன் பாம்பு கடித்து இறந்து போக, அங்கு வந்த சம்பந்தர் செய்தி அறிந்து பதிகம்பாடி, அவனை உயிர்ப்பித்து, திருமணம் செய்து வைத்தார். திருக்கொள்ளம் பூதூரில் முள்ளியாற்றில் வெள்ளம் பெருக, சம்பந்தர் பதிகம் பாட, ஓடம் தானே சென்றது. இருநதி - பெரியநதி;

100. வேதச்சிரம் - உபநிடதம்; தேமருந்து - இனிய (தெய்வ) மருந்து

மருந்துமருந்(து) என்றுகவி மாலை புனைந்தேன்;
வருந்தும்எளி யேன்இன்னல் மாற்றி - யிருந்தன்
பெருமா புகழ்பாடும் பேராத செல்வம்
தரும்ஆரூர் வாழ்தியாகே சன். 101

திருச்சிற்றம்பலம்

## சிறப்புப் பாயிரம்

திருந்துபுகழ் ஆரூர்த் தியாகேசன் தன்னை
மருந்து மருந்(து) என்(று) இனிது வாழ்த்திப் - பொருந்து துதி
சாற்றும் தியாகரா சக்கவிஞற்கு யாமெல்லாம்
ஆற்றும் கைம்மா(று)இலையாம் ஆல்.

திருவாரூர் மருந்து வெண்பாமாலை
முற்றிற்று.
திருச்சிற்றம்பலம்
தியாகேசன் திருவடி வாழ்க.

---

101. இன்னல் - துன்பம். தன் பெருமா - தன்னுடைய மா பெரும். இரும் - பெருமை வாய்ந்த; அவன் புகழ் பாடுதலே பெரும் செல்வம். அதனை என்றும் நீங்காதவாறு தியாகேசன் தந்தருள்வான்.

"பாடும் பணியே பணியா அருள்வாய்" - அருணகிரிநாதர்.

# இந்நூல் வெளியீட்டிற்கு உதவிய நல்லவர்கள்

அன்பர்களின் பெயர்களுக்கு முன் சிவத்திரு (அ) திருமதி என்றும், பெயர்களுக்குப்பின் அவர்கள் என்றும் சேர்த்துப் படிக்குமாறு அன்புடன் வேண்டுகிறேன்.

## சிதம்பரம் அன்பர்கள்

**சு. சங்கர நடராச தீட்சிதர்,** *113/101, கீழரதவீதி.*

**க. சுவாமிநாதன்,** *20 (7) தெற்குத் தேர் வீதி.*

**சு. திருநாவுக்கரசுபிள்ளை,** *9, கனகசபை நகர்*

*கயிலை மணி* **ந. சுப்பிரமணியம்,** *59, மின்நகர்*

*புலவர்* **அ. திருஞானசம்பந்தன்,** *8/3, துரவடித் தெரு*

**ந. சுவாமிநாதன்,** M.A., B.Ed., *71, விளங்கியம்மன் கோயில் தெரு*

**ச. சிதம்பர நடராசன்,** M.A., M.Ed., *10/3, புதுப்பிள்ளையார் கோ.தெரு*

**இரா. இலட்சுமி,** M.A., B.Ed., *இராமகிருஷ்ணா மேல்நிலைப்பள்ளி*

**மு. இரத்தினசபாபதி,** M.A., M.Ed., *35/13, மாலைகட்டித் தெரு*

**தி. சுவாமிநாதன்,** B.Sc., *55, மாலைகட்டித் தெரு*

**இரா. கருணாநிதி,** M.A., M.Ed., R.C.T., *மேல்நிலைப்பள்ளி*

**ஜா. இராகவன்,** M.A., *56, புதுத்தெரு*

*சிவநெறிச்சுடர்* **தி. பொன்னம்பலம்,** M.A., M.Phil., M.H.Ed,

**Er. சிவசங்கரன்,** *என்.எல்.சி., நெய்வேலி*

**இரா. சாமிநாதன்,** M.A., M.Ed., *25/14, சாத்தப்பாடி தெரு*

**சிவ. தண்டபாணி,** *அம்பலத்தாடையார் திருமடம்*

**வீ. சூரியமூர்த்தி,** *முருகன் ஸ்டோர்*

**சீனு. அருணாசலம்,** *அமைப்பாளர், தி.ஆ.சை.சி.ப.மையம்*

**Dr. மோ. செல்வகுமார்,** *தலைவர், சைவத்திருச்சபை*

**கனகவில்வமணி,** *செ.பிள்ளையார் கோயில் தெரு*

**சுப. சுப்பிரமணியன்,** B.Lit., B.Ed., *35, உமாபதி சிவம் மடம்*

**மு. கருணாநிதி,** *பூந்தோட்டம்*

**இரா. செல்வராஜன்,** M.A., M.Ed., *30, கீழ் வேங்கான் தெரு*

**அ. சோமசுந்தரம்,** *32, கீழ் வேங்கான் தெரு*

புலவர். **இரா. இராமலிங்கம்,** M.A., M.Ed., *142, சிவஜோதி நகர்*
திருமதி **கலாவதி,** M.A., B.Ed., *28, லால்பேட்டை தெரு*
**மா. வேணுகோபாலன்,** M.A., B.Ed., *51, சிவசக்தி நகர்*
சோதிடரத்னா, பேராசிரியர், முனைவர் **அ. சிவபெருமான்** *(அ.ப.க.)*
பேராசிரியர் முனைவர் திருமதி **ப. ஞானம்,** *(அ.ப.கழகம்)*
பேராசிரியர் முனைவர் திருமதி **மு. வள்ளியம்மை,** *(அ.ப.கழகம்)*
**சு. வசந்தா,** *42, கமலீஸ்வரன் கோவில் தெரு*
**சு. பழனிவேல்,** *48, ஆசிரியர் நகர்*
**ப. பாலகிருஷ்ணன்,** *விழல்கட்டி பிள்ளையார் கோயில் தெரு*
**த. சிவராமன்,** B.Sc., M.Ed., G2 *பிருந்தாவனம் குடியிருப்பு*
Dr. **க. சுவாமிநாதன்** BV.Sc.,*கீழவீதி*
**சி. எஸ். பாலசுந்தரம்** 3A *விழல்கட்டி பிள்ளையார்கோயில் தெரு*
*திருமுறைச்செல்வர்* **சு. நாராயணமூர்த்தி** M.A., B.Ed.,

**மயிலாடுதுறை அன்பர்கள்**

பேராசிரியர் **சாமி. கிருட்டிணமூர்த்தி,** *தமிழ்த்துறை,* A.V.C.*கல்லூரி*
**இரா.இராஜசேகரன்,** B.Sc., B.L. *தாசில்பண்ணை, மேலையூர், பூம்புகார்*
பேராசிரியர் **சு. தமிழ்வேலு,** *தமிழ்த்துறை,* A.V.C.*கல்லூரி*
பேராசிரியர் **இரா. மஞ்சுளா,** *தமிழ்த்துறை,* A.V.C.*கல்லூரி*
முனைவர் **கி. சுமதி,** *தமிழ்த்துறை,* A.V.C.*கல்லூரி*
முனைவர் **ம. இளையராஜா,** *தமிழ்த்துறை,* A.V.C.*கல்லூரி*
முனைவர் **ந. சரவணன்,** *தமிழ்த்துறை,* A.V.C. *கல்லூரி*
முனைவர் **க. இராஜசேகர்,** *தமிழ்த்துறை,* A.V.C.*கல்லூரி*
பேராசிரியர் **தெ. திருமுருகன்,** *தமிழ்த்துறை,* A.V.C.*கல்லூரி*
முனைவர் **சி. செல்வம்,** *தமிழ்த்துறை,* A.V.C.*கல்லூரி*
முனைவர் **ந. சாந்தகுமாரி,** *தமிழ்த்துறை,* A.V.C.*கல்லூரி*
பேராசிரியர் **இர. பத்மலட்சுமி,** *தமிழ்த்துறை,* A.V.C.*கல்லூரி*
பேராசிரியர் **ந. உமா,** *தமிழ்த்துறை,* A.V.C.*கல்லூரி*
பேராசிரியர் **இரா. கௌரி,** *தமிழ்த்துறை,* A.V.C.*கல்லூரி*

பேராசிரியர் **ந. மணிவண்ணன்,** வேதியியல்துறை, A.V.C.கல்லூரி
பேராசிரியர் முனைவர் **கிரு. பாண்டியன்,** கலைக்கல்லூரி, பூம்புகார்
**கோ. தேவேந்திரன்,** M.A., M.Ed., தமிழாசிரியர், சென்னை

**திருவாரூர் அன்பர்கள்**

**தியாக. பவானந்தம்,** புதுத்தெரு
**செல்வக்குமார்**
**க. இராஜு,** கூத்தாநல்லூர்
**அ. வீரபத்திரன்,** 7 நவக்கிரகத்தெரு

**காட்டுமன்னார்குடி அன்பர்கள்**

சித்தாந்தப் புலவர் **கோ. முத்தையன்,** A.K.மகால் தெரு
**இரத்தின திருநாவுக்கரசு,** M.A., B.Ed., 2, மடவளாகத் தெரு

**காரைக்கால், திருமலைராயன் பட்டினம் அன்பர்கள்**

தமிழ்மாமணி புலவர் **த. தட்சணாமூர்த்தி,** 20, திரு.வி.க.தெரு
**ப. நடனபாத பண்டாரத்தையா,** ஆயிரங்காளி அம்மன் மடம்
**க. இராஜசேகரன்,** 68, மார்க்கட் தெரு,

**கடலூர் அன்பர்கள்**

**கயிலை மணி மு. ஆறுமுகம்,** 6, ஆனைக்காரன் தெரு
**ஆ. சிவசண்முகம்,** B.Com., 2, S.S.R. நகர்
**வை. வீரபாண்டியன்,** 9, கௌசல்யா நகர்
அரிமா திருமதி. **உமாசங்கர்,** 24, சுப்பராயசெட்டித் தெரு
**மு. முருகன்,** B.Sc., B.L., நோட்டரி பப்ளிக், 37, தனலட்சுமி நகர்
Dr. **வி.கி.கணபதி,** B.H., M.S., M.D., 79, தங்கராஜ் நகர்
**மு. உமாதேவி,** M.A., M.Ed., பவுனாம்பாள் நகர்
**ஏ. கோதண்டபாணி,** தேரடி தெரு
**க. சோமு குருக்கள்,** B.Lit., 2/10, பு. கட்டியக்காரத் தெரு
**சொ. தியாகராஜன்,** 46, சந்நிதி தெரு
**உ. ஆறுமுகசுந்தரம்,** Rt., தாசில்தார், 17, தேரடித் தெரு
**ஜெ. தேவநாதன்,** ஜோதி ஆனந்தா சுவீட்ஸ்
**பொ. ஸ்ரீதரன்,** 71, இராஜம் நகர்

ஈ. **கோமதிநாயகம்,** *63, வைத்திலிங்கபுரம், கூத்தப்பாக்கம்*

இரா. **வெங்கடேசன்,** M.Com., *25, தனக்கோடி நகர்*

சு. **சக்திவேல்,** B.Com., *5/126, பெருமாள் நகர்.*

செ. **கலியபெருமாள்,** *2, கமலம் நகர்.*

சிவ. **மதிவாணன்,** *வள்ளியம்மை நகர்*

கா. **சூரியநாராயணன்,** M.A., (T), M.A., (E), M.A., (H) M.Ed.,

சொ. **பஞ்சாட்சரம்,** M.A., M.Ed., *விஜயலெட்சுமி நகர்*

அ. **குப்புசாமி,** B.Sc., B.Ed., *101, சரவணாநகர்*

*முருகாலயா* வை. **கிருட்டிணமூர்த்தி,** B.Sc., *சுப்புராயலு நகர்*

ஜெய. **இரமணி,** *83/1047, சுதாகர் நகர்*

அ. **மாசிலாமணி,** B.Com., M.A., *57, ஓம்சக்தி நகர், சாவடி.*

சீ. **பானுமதி,** M.A., M.Ed., (A.R.L.M.) *90, ஓம்சக்தி நகர்*

த. **மணி,** *39, ஓம்சக்தி நகர்*

உ. **இராசமாணிக்கம்,** *ஜோதி நகர், செம்மண்டலம்*

இல. **கலியமூர்த்தி,** B.A., D.S.S., 40, T.N.C.S.C. *நகர்*

வெ. **கோவிந்தசாமி,** 5, K.A.P., *நகர்*

ப. **சிவமுத்து,** *சிவகண் டிராவல்ஸ், S.N. சாவடி*

சிவ. **நெல்லையப்பன்,** B.Sc., M.B.A.,

*புலவர்* இரா. **அரங்கநாதன்,** *செந்தமிழ்ச்சோலை, கவு. சுந்தரம் நகர்*

பெ. **மெய்யழகி,** *95, நண்பர்கள் நகர், சாவடி.*

மு. **காளியப்பன்,** *(இரயில்வே) வில்வநகர்*

திருமதி கோ. **இந்திராணி,** M.A., M.Ed., *காமராசர் நகர்*

கி. **அலர்மேலு,** M.A., M.Ed., *பாடலேசர் மே. நி. பள்ளி*

இரா. **குகரமணன்,** *(நரசுஸ்காபி) விலங்கல்பட்டு*

*கவிஞர்* **காரை. பழ. ஆறுமுகம்,** *தட்சிணாமூர்த்தி நகர்*

செ. **இரவி,** M.A., *குண்டு உப்புலவாடி*

ம. **கலையரசு – விஜயா,** *5, திருவள்ளுவர் நகர், வன்னியர்பாளையம்*

**தில்லை. கோபாலகிருஷ்ணன்,** B.Sc., *கடலூர்-3.*

ப. **அசோக்குமார்,** B.Sc., *இரயில்வே குடியிருப்பு, கடலூர் 3*

சு. **மாரியப்பன்,** *கல்பனா டால்கம், கடலூர் - 3*

**பழ. சாமிநாதன்,** *புதுவண்டிப்பாளையம்*

**உ.வை. அசோகன்,** *புதுவண்டிப்பாளையம்*

**த. மணிமொழி,** B.Sc., M.Ed., *159, கண்ணகி நகர்.*

**மீனாட்சி அம்மாள் அறக்கட்டளை,** *வண்டிப்பாளையம்*

*சோதிடமாமணி* **பெ. தங்கராசு,** *புருகீசுபேட்டை*

**கோ. குப்புசாமி,** *கட்டிமுத்து தெரு, புருகீசுபேட்டை*

*சித்தாந்தப் பேராசிரியர்* **சாந்தி,** M.A., M.Phil., *சுப்பிரமணியபுரம்*

**சு. ஆனந்தன்,** *சூர்யா நகர், செம்மண்டலம்*

**இரா. சுப்பநாதன்,** B.Sc., *19 விசலாட்சி நகர், சூரப்பநாயகன்சாவடி*

**மு. குப்புசாமி,** *24 திருமலை நகர், மஞ்சை நகர்.*

**வடலூர் அன்பர்கள்**

*புலவர்* **ஆ. முருகன்,** B.Lit., B.Ed., *வள்ளலார் குருகுலம்*

**பா. பழமலைநாதன்,** *குமரன் புத்தகநிலையம், ஞானசபை வீதி*

**நெய்வேலி அன்பர்கள்**

*சித்தாந்த ரத்தினம்* **ச. மெய்கண்டநாதன்**

*சித்தாந்த ரத்தினம்* **க. அமிர்தலிங்கம்,** *மெட்ராஸ் ஸ்டோர்*

**மீ. கார்த்திகேயன், திருமலை நடராசன், B. நாராயணன்**

**P. வேல்முருகன்,** வடலூர், **அ. சுப்பிரமணியம்,**

**இராம. சிவக்குமார், க. திருஞானசம்பந்தம், பழ.இராமலிங்கம்**

**R. முருகானந்தம், அ. இரவீந்தரன், ஞானசேகரன்,**

**K. செல்வம்,** C *8, மணற்கல்சாலை, வட்டம் - 24*

**L. தங்கராசு,** C *26, பழுப்பு நிலக்கரிச் சாலை, வட்டம் - 24*

**N. இராஜேந்திரன்,** C *3,* Pylon Street, *வட்டம் - 26*

**B. கௌரி கல்யாணி,** E *70, காமராஜ் ரோடு, வட்டம் - 10.*

**பண்ருட்டி அன்பர்கள்**

*கயிலை மணி* **மு. சோமசுந்தரம்,** *623, ஸ்டேட் பேங்க் நகர்*

*சித்தாந்த ரத்தினம்* **வே. ஜீவானந்தம்,** *565, காந்தி ரோடு*

**வீ. அருணாசலம்,** *எலந்தம்பட்டு, திருவாமூர்*

**ந. ஆறுமுகம்,** *12, வானுவர் வீதி*

*சித்தாந்த ரத்தினம்* **அர.ஜெகதீசன்,** *72, லிங்க் ரோடு*

*புலவர்* **இரா. சஞ்சீவிராயர்,** *1290, கணபதி நகர்*
*புலவர்* **இரா. சுவாமிநாதன்,** 7/B, *முத்தையா நகர்*
**சா. சண்முகம்,** M.A., M.Ed., *35/5, நேதாஜி நகர்*
*அரிமா.* **T.P.T. கணேசன்,** *வாசவி சோப் ஓர்க்ஸ்*
**ச. மணிகண்ட பிரபு,** *காந்தி சாலை*

**விழுப்புரம் அன்பர்கள்**

**ஆ. அப்பர்சுந்தரம்,** *16, வரதராஜன் லேஅவுட், பூந்தோட்டம்*
**சு. கிருஷ்ணமூர்த்தி,** *1/20, கம்மாளர் தெரு, கோலியனூர்*
*பேராசிரியர் முனைவர்* **மா.சற்குணம்,** *மயிலம்*
**மா. திருஞானசம்பந்தம்,** *கீழ்ப்பெரும்பாக்கம்*

**கண்டாச்சிபுரம் அன்பர்கள்**

*புலவர்* **அ. கருணாகரன்,** M.A., M.Ed.,
**A.G. ஆறுமுகம்,** *ஸ்ரீசெல்வ விநாயகர் ஸ்டோர்ஸ்*

**புதுவை அன்பர்கள்**

*பேராசிரியர்* **க. சச்சிதானந்தம்,** *ஈசுவரன் கோயில் தெரு*
*பேராசிரியர்* **சிவ.மாதவன்,** *தாகூர் கலைக்கல்லூரி*
**வி. திருவேங்கடம்,** *22, செல்லான் நகர், புதுவை.11*
**அரசு ப. சௌக்கியநாதன்,** M.A., B.Ed., *தவளக்குப்பம்*
*சொல்லாய்வுச் செல்வர்* **சு. வேல்முருகன்,** *முருங்கப்பாக்கம்*
**இரத்தின. புகழேந்தி,** *வழுதாவூர் சாலை, கதிர்காமம்*
**மு. முனுசாமி,** *அரிமா அச்சகம், " கதிர்காமம்*
**சு. பழமலை,** *துணை வணிகவரி அலுவலர், (ஓய்வு)*

**திண்டிவனம் அன்பர்கள்**

**ந.சிவப்பிரகாசம்,** *சஞ்சீவி நகர்*
**பால. பழநி,** M.A., M.Ed., *நல்லியக்கோடன் நகர்*
*மயிலம் பேராசிரியர்* **சு. விஜயகாந்தி,** *ஜெயபுரம்*
**சி. ஆறுமுகம்,** *312/5, பூந்தோட்டம் தெரு*
**க. முருகன், ஆ.பொ. குமாரசாமி, பார்த்திபன்,**

**கு. தண்டபாணி, A. அன்புமாறன், M. கதிர்வேல், முரளி செட்டியார், சந்திரசேகரன், க. சன்மார்க்கம்.**

**வந்தவாசி அன்பர்கள்**

**Dr. குமார்,** M.B.B.S.,

**வ. குமரவேலு,** *3, பொட்டிநாயுடு தெரு*

*புலவர்* **வெ. சுந்தரேசன்,** M.A., M.Ed., *440, முத்து நகர்*

**செய்யாறு அன்பர்கள்**

**அ. முத்துக்குமரன்,** *தலைவர், அருள் ஞானப் பெருவெளி*

**நா. குமரகுரு,** *ஒத்தவாடை பிராமணர் தெரு*

**P.V. கோபாலன்,** *8, புதுத்தெரு, 6வது குறுக்குத் தெரு*

*புலவர்* **ஞான ஏகாம்பரம்,** M.A., M.Ed., *விக்டர் தெரு*

**விநாயக வீரமணி,** *58/3, திருவள்ளுவர் நகர்*

**P. சண்முகம்,** *55, திருவள்ளுவர்நகர்*

**K.N. கனகசபை,** *தமிழாசிரியர், திருவோத்தூர்*

**காஞ்சிபுரம் அன்பர்கள்**

**சு. சதாசிவம்,** *நிறுவுநர், திருமுறை அருட்பணி அறக்கட்டளை*

*பேராசிரியர்* **அமுத இளவழகன்,** *பச்சையப்பன் கல்லூரி*

**ந. தெய்வசிகாமணி,** *20/14 B, கணக்கசுப்புராயத் தெரு,*

**சிவ. முனுசாமி,** *மாணாம்பதி 603 403*

**ப. ஏலவார்குழலி,** *64A, ஏகாம்பர நாதர் சந்நிதி தெரு*

**K. சிவகுமரன்,** *46A/2, நிமந்தகார ஒத்தைவாடைத் தெரு.*

**ஏ. சுந்தரேசன்,** *16(36B)நிமந்தகார ஒத்தைவாடைத் தெரு.*

**K.N. சுந்தரமூர்த்தி,** *15A/1, கணக்கசுப்பராயத் தெரு*

**அ.வை. இராதாகிருஷ்ணன்,** *15/5A, கொல்லாச்சத்திரம் தெரு*

**சிவ. சுப்பராயன்.**

**அருள் விமலாநாதன்.**

**சிவ. பக்தவச்சலம்.**

**சென்னை அன்பர்கள்**

**பனைசமூர்த்தி,**

*கவிஞர்* **செ. தேனம்பலம்,** *அயனாவரம், சென்னை 23.*

**Er. R. கண்ணன்,** *916, 6வது அவென்யூ, அண்ணாநகர் மே. விரிவு*

**சு. உமாபதிசிவம்,** மகாகவி பாரதியார்நகர், வியாசர்பாடி.
செந்திலடிமை **S. சுந்தரம்** 41 C பீச்ரோடு, பெசண்ட்நகர்.
**சி. குருசாமி பிரகாசம்,** ஸ்ரீ சாயிநகர், விருகம்பாக்கம்
Dr. **S. மகாலிங்கம்,** M.D.S. பழைய வண்ணாரப்பேட்டை
**இரா. செல்வராஜ்,** 6, சிவானந்த நகர், சென்னை-99.
புலவர் **மா.கி.இரமணன்,** திருஒற்றியூர், சென்னை-19.
புலவர் திலகம் **சி. வித்யாசாகர்,** புழுதிவாக்கம், சென்னை-91.
**வெ. இராமச்சந்திரன்,** 14 ப.வி. கோயில்தெரு, புழுதிவாக்கம்.

## சேலம் அன்பர்கள்

**மணம். சேரா. சந்திரகாசன்,** M.A., M.Ed., அஸ்தம்பட்டி
ஆன்மீகப் பேச்சாளர் **சேலம் சிட்டிபாபு,** அழகாபுரம் புதூர், சேலம் 16
புலவர். **மா. நடராசன்,** நடுவலூர்.

## ஈரோடு அன்பர்கள்

**S.A. சண்முகவேல்,** M.A., M.L. நோட்டரி, ஈரோடு-11.
**மா. இராஜு,** 47, சிறுவலூர் ரோடு, கவுந்தப்பாடி.
**V.M. நடராஜன்,** பெருந்துறை 638 052
**மே.க. கந்தசாமி,** மேட்டூர், கொந்தளம், நாமக்கல் மாவட்டம்
**பார்வதி அம்மாள்,** பாச்சாங்காட்டூர்.

## கோவை அன்பர்கள்

**P. வடிவேல் கண்ணன்,** சிவனடியார் திருக்கூட்டம், அருணோதயம், ஸ்ரீ அருணாசலா பவுண்டேசன், கோவை 641 001

## பிறவூர் அன்பர்கள்

**பேராசிரியர் கி. சிவக்குமார்,** அரசு கல்லூரி, திருமுதுகுன்றம்.
**சோம. ஆறுமுகம்,** ஆறுமுக ஆசாரி சந்து, தஞ்சாவூர் - 9
புலவர் ச. **சுந்தரேசன்,** M.A., M.Ed., ஆர்க்காடு
**ந. சுப்பிரமணிய பாரதியார்,** வள்ளலார் திருச்சபை, வேட்டவலம்
**கு. கலியமூர்த்தி,** M.A., M.Ed., திருக்கூடலையாற்றூர்
**K.C. குமாரசாமி** 6, ஆட்லிரோடு, உதகை 643 001



திருவாவடுதுறை ஆதீனம் சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள்
நூல்களை வெளியிட்டு ஆசியருளல் 01.01.2010, 27.02.2010

